# கல்கி

KALKI 12.2.2006
ரூ.8.00
96 பக்கங்கள்

குடும்பத்துடன் களிக்க...

ஜயிப்பாரா?



ல்வி தயார்!



## மேயரை மடக்கிய கமல்!

# பாப்பராஜி பரபரப்புகள்!

'பொது வாழ்க்கைன்னு வந்துட்டா இதெல்லாம் சகஜமப்பா' - என இன்டர்நேஷனல் ஸ்டார்களெல்லாம் தங்களைப் பற்றி வரும் கிசுகிசுக்களை ஜாலியாக எடுத்துக் கொள்ள வேண்டியது தான். அந்தளவு பாப்பராஜிக்களின் துரத்தல் அங்கே உண்டு. லேட்டஸ்ட்டாக பாப்பராஜிக்களால் பரப்பப்பட்டுள்ள ஸ்பெஷல் செய்திகள் :

• ஜெனிபர் லோபஸ் தன் கணவர் மார்க் அந்தோணியுடன் லேட்டஸ்ட்டாக குழந்தைகளுக்கான உடைகளை ஷாப்பிங் செய்துள்ளார். 'பரிசுத் தருவதற்காக வாங்கின மாதிரித் தெரியல. அவங்களுக்காகத்தான் வாங்கினாங்க' என்றாராம் அந்தக் கடைக்காரர். எனவே, இதனால் அறிவிக்கப்படுவதென்னவென்றால் லோபஸ் மீண்டும் அம்மாவாகப் போகிறார்.

• இதுவரை டென்னிஸில் ஒரு சர்வதேச பட்டத்தைக் கூட ஜெயித்ததில்லை. ஆனால் அதிகமாக டௌன்லோட் செய்யப்படுபவை அன்னா கோர்னிகாவின் படங்கள்தான். இதைக் கணக்கில் கொண்டு அன்னா கோர்னிகாவின் படங்கள் என தலைப்பிடப்பிட்ட மெயில்கள் வழியே வைரஸ்கள் ஜரூராகப் பரப்பப்படுகிறதாம்.

• ஏஞ்சலினா ஜூலி இப்போது இரட்டைக் குழந்தைகளைச் சுமக்கிறாராம். இந்த நேரத்திலும் ஓய்வெடுக்காமல் வேலைகளில் பிஸியாக அலைய, அவரது டாக்டர்கள் உடல்நிலை பற்றி கடும் எச்சரிக்கை விடுத்துள்ளனராம்.

• ஹாலிவுட் ப்ளேபாய் லியானார்டோ டிகாப்ரியோவின் லேட்டஸ்ட் ரொமான்ஸ், நடிகை லிண்ட்சே லோஹனுடன்தானாம். ஆஸ்துமாவால் ஆஸ்பத்திரியில் அனுமதிக்கப்பட்டிருந்த லிண்ட்சேவைத் தினமும் வந்து பார்த்தவர் டிகாப்ரியோதானாம்.

• சென்ற ஞாயிறு நள்ளிரவில் அமெரிக்காவின் மாலிப் என்ற இடத்தில் ஒரு பிஸியான ஹைவேஸில் பிரிட்னி ஸ்பியர்ஸ் ஓட்டிவந்த கார் பிரேக் டௌன் ஆகிவிட்டது. பிரிட்னியை விடாமல் துரத்திக் கொண்டுவந்த பாப்பராஜி ஒருவர்தான் அவருக்குப் பாதுகாப்பாக இருந்து, போலீஸை வரவழைத்து, போலீஸ் காரில் அவரை ஏற்றி அனுப்பி வைத்தாராம். (நீதி : பாப்பராஜிக்கள் நல்லதும் செய்வார்கள்).

- ஷிவ்


• பிரிட்னி


• லிண்ட்சே

## வட்டமேஜை

# தலையில் தூக்கி ஆடாமல்...

### இதமளித்த இனிமை!

✉ பிருந்தா ஜெயராமனின் 'சொந்தங்கள் வாழ்க!' பயனுள்ள தொடர். ஒருவரை ஒருவர் புரிந்து கொண்டு, உணர்வுகளை மதித்து நடந்தால் சொந்தங்கள் தழைக்கும் என்பது நூற்றுக்கு நூறு உண்மை.

மெய்யனூர், கி. சௌந்திரம்

✉ 'குற்றம் பார்க்கில் சுற்றமில்லை' என்பார்கள். அதைத் தெளிவாக விளக்கி இருந்த விதம் சிறப்பு.

பெங்களூர் - 10, என். ராஜா, ராமலிங்கம்

✉ மனித உறவுகளில் கீறல்கள் விழுந்திருந்திருக்கும் இன்றையச் சூழலில், 'சொந்தங்கள் வாழ்க!' தொடர் ஒரு வரப்பிரசாதம்.



மதுரை, என். பாலகிருஷ்ணன்

✉ சந்தேகம் வந்துவிட்டால் சகலமும் நாசமாகும் என்பதை பிருந்தா ஜெயராமன் பகிர்ந்து கொண்டவிதம் அருமை! இதை ஒவ்வொருவரும் புரிந்துகொண்டு - நடந்தால் வாழ்க்கை வசந்தம்தான்!

ஈரோடு - 1, ரேவதிப்ரியன்

✉ சொந்தங்களைப் பேண, பண்பட்ட அறிவுரைகளை நல்கிய பிருந்தா ஜெயராமனின் மனநலத் தொடர் இனிய சங்கீதமாய் இதமளித்தது!

நெய்வேலி, கே. சுந்தர்

✉ வாரந்தோறும் ராசிபலன் எழுதும் தஞ்சை பரத்வாஜ், இனி ராசி எண்ணையும் கணித்து எழுதலாமே.

சென்னை - 26, ஆரூர்சேகர்

✉ புராண, இதிகாசங்களில் வரும் கடவுள் அவதாரங்களைத் தமது நாடகங்களின் மூலம் எங்கள் கண்முன் கொண்டுவந்து நிறுத்திய மனோகர் வைகுண்ட ஏகாதசி அன்று இறந்தது எவ்வளவு பொருத்தம்!

சென்னை - 40, எஸ்.எஸ். நாராயணன்

✉ சத்தியநாராயணா ராவ் கெய்க்வாட்டின் பேட்டியைப் படித்தேன். 'சென்னைதான் ரஜினிக்குச் சொந்த ஊர்' என்று அவர் சொல்வதில் பாசம், உணர்ச்சி, உண்மை மூன்றும் கலந்திருந்தன.

லால்குடி, எம். இராஜேந்திரன்

✉ "இனி பொறுப்பதில்லை" எம். நடராசனின் பேட்டி, பச்சை மிளகாயின் காரத்தோடு விறுவிறுப்பாய் இருந்தது.

திருவாரூர், ஆர். ராமசுப்ரமணி

✉ தலைமை தேர்தல் ஆணையர் டாண்டன் பற்றிய கருத்துகளை 'டாண்' 'டாண்' என்று கூறி எங்களின் ஓட்டு மொத்த வாக்குகளையும் அள்ளிக் கொண்ட தராகவின் பதில், வெல்'டன்!'

வேலூர்-6,
வே.ந. கதிர்வேல்

✉ நட்சத்திரத்



### *கீதை அழைக்கிறது!*

**வேதாந்தா இன்ஸ்டிடியூட் சுவாமி பார்த்தசாரதியின் பகவத் கீதை சொற்பொழிவு (அத்தியாம் 12) சென்னை, தேனாம்பேட்டை, காமராஜர் அரங்கில், பிப்ரவரி 7 - 10ம் தேதி வரை (நேரம் மாலை 6.30 முதல் 8.00வரை) நடைபெறுகிறது. அனுமதி இலவசம். அனைவரும் வருக!**

தொகுதியான ஆண்டிப்பட்டியை அலசிய விதம் அருமை. சொன்னாலும் சொல்லாவிட்டாலும் அது சலுகையில் மிதக்கும் அரசிப்பட்டிதான்!
**கோயம்புத்தூர் -1, டி. ஜெய்சிங்**

✉ டீ.வி நடிகை காவேரியின் சவால், சினிமா நடிகைகளைக் கட்டாயம் சிந்திக்க வைத்திருக்கும்.
**மேற்கு மாம்பலம், ஆர். கோபாலன்**

✉ 'டீ.வி ராணி M.B.B.S.' வாசிக்க, சிரிப்பு சிரிப்பு; மேலும் மேலும் சிரிப்பு!
**தேவகோட்டை, எல்.எம். அட்சயா**

✉ தினம் நிர்ணயித்துக் கொண்டாடுவதற்கு அல்ல உறவுகள்; தினம் தினம் கொண்டாடுவதற்குத்தான் என்ற வானவில் வயசின் வைர வரிகள் என் டயரியில் இடம் பிடித்துக் கொண்டன.
**கிழவன்ஏரி, செ. சத்தியசீலன்**



✉ அஜித் என்பதற்காகவோ, விஜய் என்பதற்காகவோ தலையில் தூக்கி வைத்துக் கொண்டு ஆடாமல் 'பரமசிவன்', 'ஆதி'யில் உள்ள குறைகளையும் சுட்டிக்காட்டி எழுதப்பட்டிருந்த நடுநிலை விமரிசனங்கள் சூப்பர்ப்!
**திருப்பரங்குன்றம், டி.கே. சுப்பிரமணியன்**



✉ குவாட்ரோச்சி, சிட்டாட்டம், மருத்துவ செக்-அப் - மூன்று கார்ட்டூன்களுமே முத்திரை டச்!
**கும்பகோணம், கே.என். பாலகிருஷ்ணன்**



✉ 'சினிமாவுக்குப் போகலாம் வாங்க' - தொடர் கிராமத்து டூரிங் டாக்கீஸின் காட்சிகளை கண்முன் நிறுத்தி கலக்குகிறது.
**அரியலூர், தேனூர் நண்பர்கள்**






# கல்கி

**பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில்**
அச்சிட்டு வெளியிடுபவர் :
**கி. ராஜேந்திரன்**

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் :
**சீதா ரவி**

ஆசிரியர் குழு :
**அனுராதா சேகர்**
**ஆர்.சி. ஜெயந்தன்**
**மு.மாறன்**

வடிவமைப்பு :
**எஸ். ஸ்டீஃபன்**
**பி.ஆர். ராஜன்**

தொலைபேசி :
2225 1522, 2225 0623,
2225 1324

தொலைநகல் :
044 - 22251021

மின்னஞ்சல் :
ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com
சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com
பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com
கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

சந்தா விவரம் :
உள்நாடு :
ஒரு வருடம் : ரூ.440/-
ஆறு மாதம் : ரூ.220/-

வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 65 யு.எஸ். டாலர்

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.

ஒவ்வொரு இதழும் உங்கள் மேன்மைக்கு

சென்ற வருஷத்து சுதந்திரப் போரில் நமது பெண் தெய்வங்கள் நிகழ்த்திய வீர தீர பராக்கிரமச் செயல்களைக் குறித்து ஒரு தனி புத்தகமே எழுதலாம் என்று விகடனில் நான் ஏற்கெனவே எச்சரிக்கை செய்திருந்தேன். புத்தகம் அளவுக்கு விரிவாக எழுதாவிட்டாலும் இக் கடமையை நான் நிறைவேற்றியே தீர வேண்டும். இதற்குக் கைம்மாறாக, அத்தேவியர் நான் எழுதும் விஷயங்கள் தங்களுக்கு விளங்கினாலும் விளங்கா விட்டாலும், பிடித்தாலும் பிடிக்காவிட்டாலும், "நன்றாயிருக்கிறது" என்று சொல்லி வருவார்களென்று எதிர்பார்க்கிறேன். 'விகட'னைப் படிக்கும் சகோதரிகள் எத்தனை பேர் உண்டென்பதும், அவர்களில் எத்தனைபேர் 'கல்கி'யின் கட்டுரைகளை விரும்புகிறார்களென்பதும் எனக்குத் தெரியாது. அவற்றைத் தவறாமல் படித்து "நன்றாயிருக்கிறது" என்று சொல்லிவரும் ஒரு பெண்மணி, நிச்சயமாய் இருக்கிறாள். ஆனால் அவள் அப்படிச் சொல்லாவிடில் நான் அன்று முழுதும் கோபித்துக் கொண்டு சாப்பிடமாட்டேனென்றும், சாப்பிட்டாலும் "சமையல் நன்றாயிருக்கிறது" என்று சொல்லமாட்டேனென்றும் அவளுக்குத் தெரியும்.

சென்ற வருஷத்துப் போரில் ஆண்களின் பங்கை விடப் பெண்களின் பங்கு அதிகமென்பது என் உறுதியான கொள்கையாகும். இதற்கு விரோதமாய் யாராவது சொன்னால் அவர்களுடன் வாதப் போர் தொடுக்கத் தயாராயிருக்கிறேன். எப்படியென்றால், "புருஷன் செய்யும் புண்ணியத்தில் பாதி அவன் மனைவியைச் சேர்கின்றது" என்று நமது சாஸ்திரங்கள் கோஷிக்கின்றன. இதன்படி பார்த்தால் ஆண் மக்கள் செய்த தியாகத்திலும், அவர்களுடைய தொண்டின் பலனிலும் சரிபாதி பெண்மணிகளை அடையுமன்றோ? பெண்கள் தனிப்படச் சிறிதளவு பணி செய்திருந்தாலுங்கூட மேற்கூறிய பாதியுடன் இதுவும் சேரும் போது, புருஷர்களின் பங்கைவிடப் பெண்களின் பங்கே திண்ணமாய் அதிகமாகின்றது.

வானர ராஜனாகிய வாலியும் அதிசயமான வரம் பெற்றிருந்ததாக இராமாயணத்தில் படித்திருக்கிறோம். அவனுடன் போர் புரிவதற்காக யார் வந்து எதிரில் நின்ற போதிலும், அவ்வெதிரியின் பலத்தில் பாதி வாலிக்குப் போய்விடுமாம். வாலிக்கு இயற்கையாகவுள்ள பலமும், எதிரியின் பலத்தில் பாதியும் சேர்வதால், வாலி எப்போதும் எதிரியைவிடப் பலசாலியாகவே இருப்பான். ஆகையினால்தான் இராமர் மரத்தின் மறைவிலிருந்து வாலியைக் கொல்ல வேண்டியதாயிற்று என்பது இராமாயணக் கதை. இதுபோலவே பாரத நாட்டில் சென்ற வருஷம் நடந்த போரின் பெருமையில் பாதிக்கு மேல் பெண்களைச் சேரும் என்று நான் சொல்லுகிறேன். இராமாயணக் கதையை ஒப்புக் கொள்ளாதவர்கள்கூட இதை ஒப்புக்கொண்டே தீர வேண்டும்.



அமரர் கல்கி

**சா**ஸ்திரக் கூற்று ஒருபுறமிருக்க புருஷர்களின் தேசத் தொண்டின் பலனில் பங்கும் அதற்குமேலும் கோருவதற்கு தர்ம நியாயமான பாத்தியதை ஸ்திரீகளுக்கு உண்டென்பதில் சந்தேகமில்லை. சிறை புகுந்த ஆண் மகனுக்கு அதிக கஷ்டமா, வீட்டிலிருந்த பெண் தெய்வத்துக்கு அதிக கஷ்டமா என்று ஒருநிமிஷம் சிந்தை செய்து பாருங்கள். "உலகிலேயே திறமை வாய்ந்த உத்தியோக வர்க்கத்தின்" மேற்பார்வையில் புருஷன் மணிக் கணக்குத் தவறாமல் உண்டு உறங்கிச் சிறையில் கவலையற்ற வாழ்க்கை நடத்தி வருகையில், எதற்கும் கணவன் கையையே இதுகாறும் எதிர்பார்த்து வந்த மனைவி வீட்டில் குழந்தை குட்டிகளை வைத்துக் கொண்டு பட்ட கஷ்டம் ஆண்டவனுக்கே தெரியும். இத்தகைய பத்தினிகள் பலரை நான் அறிவேன். அவ்வாறே புதல்வர்களைச் சிறைக்கனுப்பிவிட்டுப் பல பிடுங்கல்களுக்கு ஆளாகித் துன்புற்ற தாய்மாரையும் அறிவேன். தந்தையைச் சிறைக்கனுப்பிவிட்டுத் தவித்துக் கொண்டு நின்ற புதல்விகளையும் அறிவேன். இவை மட்டுமா? சில மாத காலம் சிறைக்குச் சென்ற என் நண்பர்கள் பலருக்கு அவர்கள் வெளியில் வந்ததும் அவர்களுடைய மனைவிமார் புதிய குழந்தைகளைப் பரிசளித்து உவந்தார்கள். அத்தகைய நிலையில் அவர்களை விட்டுச் சென்றார்கள் நமது தேச பக்த வீர இளைஞர்கள்!

**யா**ருடைய கஷ்டம் அதிகம், யாருடைய தியாகம் பெரிது என்று தயவு செய்து இப்பொழுது சொல்லுங்கள். என்னுடைய தியாகந்தான் பெரிது என்று எந்த ஆண் மகனாவது இன்னமும் இறுமாந்திருந்தால் அவனுக்கு ஓர் எச்சரிக்கை செய்ய விரும்புகிறேன். கடவுள் அருளால், மறுபடியும் ஒரு முறை சுதந்திரப் போர் தொடங்குமாயின், நமது தேசத் தொண்டர்களின் மனைவிமாரும், தாய்மாரும், புதல்வியரும் "நாங்கள் தான் முதலில் சிறை புகுவோம். நீங்கள் வீட்டைப் பார்த்துக் கொள்ளுங்கள்" என்று சொல்லப் போகிறார்கள். அப்போது சிறை புகுவோரின் தியாகம் பெரிதா, வீட்டிலிருப்போரின் தியாகம் பெரிதா என்பது நன்கு விளங்கிவிடப் போகின்றது. அதுவரையில் வாலைச் சுருட்டிக் கொண்டு சும்மா இருங்கள்!




- 'பெண் தெய்வங்கள்' தொகுப்பிலிருந்து (வானதி பதிப்பகம்)

# விண்ணைத் தொடலாம் வாசன்!

புலி வருது கதையாகப் பலரது வயிற்றில் புளியைக் கரைத்துக் கொண்டிருந்த மத்திய மந்திரி சபை மாற்றம் கடைசியில் நடந்துவிட்டது. வாசனுக்கு 'திட்ட அமுலாக்கம் - புள்ளியியல் துறை' என்று அறிவிக்கப்பட்டதும் "இதென்ன கேள்விப் படாத துறையாக இருக்குதே 'ஏதேனும்' செய்ய முடியுமா?" என்று வாசன் தொண்டர்கள் ஒருவரை ஒருவர் கேட்டுக் கொண்டார்கள். பலர், வாசனையே கேட்டார்கள்... வாசன் என்ன பதில் தந்தாரோ தெரியவில்லை. வாசகர்களுக்கு விளக்கம் தர வேண்டாமா?

மத்திய அரசின் தகவல் துறையில் உயர் அதிகாரியாகப் பணியாற்றி ஓய்வு பெற்ற இருவரை, இந்தத் துறையைப் பற்றிக் கேட்டோம். "ரொம்ப நல்ல, செயலாற்ற வாய்ப்பு உள்ள துறை. ஆனால் துவக்க நிலையில் இந்தத் துறைக்குக் கொடுக்கப்பட்ட முக்கியத்துவம் காலப் போக்கில் குறைந்து விட்டது. இதற்குக் காரணம், பொறுப்பேற்ற அரசியல்வாதிகளின் ஈடுபாடின்மைதான். ஆனும் அரசியல்வாதிகளுக்கு கௌரவம் கொடுக்க வேண்டுமென்று இந்தத் துறையை வைத்திருக்கிறார்களோ என்ற நிலைக்கு இப்போது வந்துவிட்டது" என்றார்கள். வாசனுக்கு முன்பு இந்தத் துறையில் இருந்தவர் ஆஸ்கார் பெர்னாண்டஸ்.

இந்தத் துறை முதலில் திட்டத் துறையுடன்தான் இணைந்திருந்தது. 1985-ல் தனித் துறையாக மாற்றினார்கள். இந்தத் துறையின் முக்கியப் பணி, எமர்ஜென்ஸி காலத்தில் அறிமுகப்படுத்தப்பட்டு, ராஜீவ் காலத்தில் சீரமைக்கப்பட்ட 20 அம்ச திட்டம் செயல்படுவதைக் கண்காணிப்பதுதான். கல்வி, விவசாயம், விவசாயத் தொழிலாளர், ஆரோக்கியம், வேலை வாய்ப்பு போன்ற வகையில் முன்னேற்றத்தைக் காணவே வறுமை ஒழிப்புத் திட்டம் என்ற பெயரில் 20 அம்ச திட்டம் அறிமுகப்படுத்தப்பட்டது.

இதைக் கண்காணிப்பதைத் தவிர பதினோரு முக்கியத் துறைகளில் - அதாவது எரிசக்தி, நிலக்கரி, எஃகு, ரயில்வே, கப்பல், துறைமுகம், தொலைத் தொடர்பு, உரம், சிமெண்ட், பெட்ரோல், சாலை மேம்பாடு, விமானப் போக்குவரத்து துறைகளில் முன்னேற்றங்களை ஆய்வு செய்வதும் திட்டங்களை விரைவு படுத்துவதும் கட்டமைப்புகளைக் கண்காணிப்பதும் இந்தத் துறையின் வேலை.

இந்தத் துறைகளில் ஏற்படும் முன்னேற்றங்களை மாதந்தோறும் அறிக்கையாகக் கொடுத்து பிரதமர் அலுவலகத்துக்கு அனுப்புகிறார்கள். இது ஒரு பக்கம் இருக்க பாராளுமன்ற உறுப்பினர்களின் தொகுதி மேம்பாடு நிதி பயன்பாடு கண்காணிப்பும் இந்தத் துறையின் கீழ்தான் வரு

கிறது. இந்த நிதி முறையாக, ஊழல் ஏதும் இல்லாமல் செயல்படுகிறதா?'' என்று பார்க்கும் பொறுப்பும் வாசனுக்கு உண்டு.

இந்தத் திட்ட அமுலாக்கத் துறையோடு இணைந்திருக்கும் புள்ளியியல் துறை முன்னேற்றப் பாதைக்குத் தேவையான அடிப்படை திட்டங்களைத் திட்ட நாடு முழுவதும் சமூக - பொருளாதார ஆய்வுகளை நடத்தி புள்ளி விவரங்களைத் தொகுக்கிறது. பல நூறு மையங்களில் அத்தியாவசியப் பொருட்களின் விலைவாசியைத் தெரிந்துகொண்டு நுகர்வோர் குறியீட்டுப் புள்ளியை (இதை விலைவாசி புள்ளி என்றும் சொல்வார்கள்) நிர்ணயிக்கிறார்கள். இதன் அடிப்படையில்தான் ஊழியர்களுக்கு பஞ்சப்படி கொடுக்கிறார்கள். இந்தப் புள்ளியியல் துறை ஆய்ந்து தொகுக்கும் புள்ளி விவரங்கள் மக்களின் வாழ்க்கைத் தரத்தை பிரதிபலிப்பவை.

இப்படிப்பட்ட முக்கியத்துறை காலப் போக்கில் கோப்புகளிலும் அறிக்கைகளிலும் மட்டுமே இடம் பிடித்துக் கொண்டு முழுக்க அதிகாரிகளின் துறையாக மாறிவிட்டது. இதற்கு ஒரு புத்துணர்ச்சியும் உந்து சக்தியும் கொடுக்க வாசனுக்கு வாய்ப்பு இருக்கிறது என்று சொல்கிறார்கள்.

**வெ**றும் சடங்குத்தனமாக நடந்து கொண்டிருக்கும் ஆய்வுக் கூட்டங்களை, மிகத் தீவிரத்துடன் நடத்த வேண்டும். மத்திய அரசின் இதர துறைகளின் அமைச்சர்கள் திட்ட அமுலாக்கத் துறையை சீரியஸாக எடுத்துக்கொண்டு அதன் வழிகாட்டுதலை ஏற்றுக் கொண்டு செயல்பட வேண்டும். மாநில அரசில் செயல்படும் வறுமை ஒழிப்புத் திட்டங்களில் 90 சதம் மத்திய அரசின் மான்யத்தில்தான் நடக்கின்றன. எனவே மாநில அரசு மட்டத்தில் மட்டுமல்ல; மாவட்ட அளவிலும் இறங்கி இந்தத் திட்டங்களை ஆராய்ந்து, முன்னேற்றப் பாதையில் செலுத்த முடியும். முதலில் வாசனுக்குக் கொஞ்சம் சிரமமாக இருக்கக்கூடும். ஆனால் முயன்றால், கடின உழைப்பால் அவர் விண்ணைத் தொட முடியும் என்றும் சொல்கிறார்கள்.

- ஸ்ரீநி

தமிழக அரசியலில் தமது 'பரபர' கருத்துக்கள் மூலம் சூட்டைக் கிளப்பிக் கொண்டிருப்பவர் விடுதலைச் சிறுத்தைகள் பொதுச் செயலாளர் தொல். திருமாவளவன். இப்போது 'என்னைக் கொல்ல ஒரு கோடி விலை பேசப்பட்டுள்ளது' என்று ஒரு புது குண்டை வீசியிருக்கிறார். என்ன... ஏது... என்று அவரிடம் கேட்டோம்.



# "கலைஞர் பதிலுக்காகக் காத்திருக்கிறேன்!"

**எப்பொழுதுமே பரபரப்பாக வளைய வரும் சிறுத்தை தற்போது ரொம்பவும் அடக்கி வாசிக்கிறதே... என்ன விஷயம்?**

குஷ்புவையும், தங்கர் பச்சானையும் பற்றி நான் பேசினால் அதை முதல் பக்கத்தில் போடும் ஊடகம், எங்கள் இயக்க நிர்வாகிகள் சாதி வெறியர்களால் படுகொலை செய்யப்படுவதை எட்டாம் பக்கத்தில் சிறிய அளவில் பதிவு செய்கின்றன. இவ்வளவு ஏன்... என்னைக் கொலை செய்ய சதி செய்யப்பட்டு வருகிறது. எனது தலைக்கு ஒரு கோடி விலை பேசப்பட்டுள்ளது. ஆனால் இதைப் பற்றி செய்தி வெளிவரவில்லை. இதற்குக் காரணம் திருமாவளவன் என்ன கலைஞரா... ஜெயலலிதாவா என்ற எண்ணம்தான். நான் என்னுடைய வழக்கமான பணிகளைச் செய்து கொண்டுதான் இருக்கிறேன்.

**உங்கள் உயிருக்கு ஆபத்து இருப்பதை ஏன் முதல்வரின் கவனத்துக்குக் கொண்டு செல்லக் கூடாது?**

ஆபத்து எனது உயிருக்கு மட்டுமல்ல... எனது கட்சி நிர்வாகிகள் பலரும் தொடர்ந்து சாதிவெறியர்களால் படுகொலை செய்யப்படுகின்றனர். ஆனால் அவை தொடர்பான முதற்கட்ட விசாரணை கூட

நடத்தப்படவில்லை. இது தொடர்பாக டி.ஜி.பி. அலெக்சாண்டரிடம் புகார் மனு தரப்பட்டுள்ளது. உரிய நடவடிக்கை எடுக்கப்படாத பட்சத்தில், தேவைப்பட்டால் ஜெயலலிதாவைச் சந்திப்பேன். ஒரு வேளை எனது உயிர்தான் சாதி வெறியர்களுக்கு வேண்டும் என்றால், அதன் மூலம் தாழ்த்தப்பட்ட மக்கள் எழுச்சியும், வளர்ச்சியும் பெறுவார்கள் என்றால் என் உயிரையும் தரத் தயார்.

**நீங்கள் ஜெயலலிதாவிடம் சரணடைந்து விடுவீர்கள் என்று பேச்சு இருக்கிறதே?**

ஊடகங்கள் தங்களுடைய கற்பனைத் திறனுக்கு ஏற்றவாறு பரபரப்பாகச் செய்தி வெளியிடுகின்றன. ஆனால் எங்களுடைய நிலைப்பாடு என்பது



## –திருமா தேர்தல் எதிர்பார்ப்பு!

நாங்கள் கடந்த காலங்களில் எடுத்து வந்துள்ள நிலைக்கும், மக்களிடம் எங்களுக்குள்ள நற்பெயருக்கும் களங்கம் ஏற்படாத வகையில் இருக்கும்.

**நீங்கள் பா.ம.க.வின் சின்னத்தில் போட்டியிடுவீர்கள் என்று கூறப்பட்டது. ஆனால் அதை நீங்கள் மறுத்து விட்டீர்கள்... ஒருவேளை தி.மு.கவுடன் ஏற்பட்ட மனக் கசப்பு பா.ம.கவுடனும் ஏற்படலாம் என்று அஞ்சுகிறீர்களா?**

தி.மு.க. கூட்டணியிலிருந்து விலகியதற்குக் காரணம் சின்னம் அல்ல...

தி.மு.கவுடனேயே நீடிக்க வேண்டும் என்ற போராட்டம்தான் காரணம். இந்தத் தேர்தலின் மூலம் எங்களுக்கென்று ஒரு தனிச் சின்னம் கிடைக்க வேண்டும். அதற்கு ஆறு சதவிகித வாக்குகளைப் பெற வேண்டும். அல்லது எட்டுத் தொகுதிகளில் வெற்றிபெற வேண்டும். இந்த அடிப்படையில் தான் எங்களுடைய கூட்டணி(?) அமையும். சென்ற சட்டமன்ற தேர்தலின்போது கலைஞர் திருச்சி மற்றும் கோவையில் செய்தியாளர்கள் சந்திப்பின்போது எங்களுக்கு நேரடி அழைப்பு விடுத்தார். அதன் பின்னரே நாங்கள் தி.மு.க. கூட்டணியில் இணைந்தோம். அதைப் போன்றே இம்முறையும் கலைஞர் எங்களை நேரடியாக அழைத்தால் நாங்கள் தி.மு.க. கூட்டணியில் சேருவோம்... ஆனால் இதுவரை கலைஞர் எவ்வித சாதகமான பதிலையும் தரவில்லை. அதே சமயம் பாதகமான கருத்தையும் தெரிவிக்கவில்லை.

**ம.தி.மு.க.,-விடுதலைச் சிறுத்தைகள் உள்ளிட்ட சில கட்சிகளை மூன்றாவது அணியாகக் களமிறக்க நடராஜன் உள்ளிட்டோர் முயற்சிக்கிறார்களாமே...?**

நடராஜனுடன் நான் சில மேடைகளில் கலந்து கொண்டது. அதில் கார்த்திக், வீரமணி, மதுரை ஆதீனம் உள்ளிட்டோர் கலந்து கொண்டது உண்மைதான். ஆனால் நடராஜனுடன் நான் அரசியல் பேசுவதே இல்லை. ஆகவே எந்தத் திட்டமும் வகுக்கப்படவில்லை. இன்னும் தெளிவாகவே சொல்கிறேன். நாங்கள் தனித்தும் போட்டியிட மாட்டோம். மூன்றாவது அணியிலும் அங்கம் வகிக்க மாட்டோம்.

**புதிதாகக் களமிறங்கவுள்ள விஜயகாந்த், கார்த்திக் பற்றி?**

'நான் காசோடு அரசியலுக்கு வந்தவன்' என்கிறார் விஜயகாந்த். கொள்கையோடு அரசியலுக்கு வருபவர்களைத்தான் மக்கள் ஏற்பார்கள்.



# செல்வி தயார்!

**ரி**டான் நிறுவனத்தில் தமக்குரிய பணிகளை முன்கூட்டியே முடித்துக் கொடுப்பதில் அவசரம் அவசரமாக ஈடுபட்டிருக்கிறார் 'செல்வி' ராதிகா... ஏன் இந்த அவசரமாம்... வேறென்ன... தேர்தல் கண்ணுக் கெட்டும் தூரத்தில் கண்சிமிட்டிக் கொண்டிருப்பதுதான். தேர்தல் நேரத்தில் தி.மு.க.வின் பிரசார பீரங்கியாக அவதாரம் எடுப்பார் ராதிகா.

இந்தமுறை கிராமப் பகுதிகளுக்குச் சென்று ஒரு கலக்கு கலக்க இருக்கிறார்.

இதையெல்லாம் விட சூப்பர் மேட்டர் ஒன்று இருக்கிறது. 'அம்மா' ஆண்டிப்பட்டியில் என்றாலும் பர்கூரில் என்றாலும் அவரை எதிர்த்து ராதிகாவையே களம் இறக்க திட்டமிட்டுள்ளதாம் தி.மு.க தலைமை.

சென்ற முறை சரத்குமாரும் ராதிகாவும் 'கோடீஸ்வரன்' பாணியில் 'நாங்க ரெடி, நீங்க ரெடியா' என்று வோட்டு கேட்டார்கள். இந்த முறை எந்த ஸ்டைலில் வோட்டு வேட்டையாடப் போகிறார்களோ?

- முராரி

படம் : ஸ்ரீஹரி

பணத்தோடு வருபவர்களை பிழைப்பு வாதிகள்தான் ஏற்பார்கள். கார்த்திக் ஒரு திடீர் அரசியல்வாதி. ஒரே மேடையில் நான் தேவர் இனத்தவன் என்கிறார். அடுத்த சில நிமிஷத்தில் நான் தமிழன் என்பதில் பெருமிதமடைகிறேன் என்கிறார். உடனே தமிழர் என்பதெல்லாம் இரண்டாம் பட்சம். நான் ஒரு இந்தியன் என்கிறார். எப்படியோ கார்த்திக்கால் தமிழகத்துக்கு நல்லது நடந்தால் அதை வரவேற்போமே...

**'அன்புத் தோழி' படத்தில் உங்களுக்கு 'கேப்டன்' வேடமாமே?**

*(புரிந்து கொண்டு பலமாகச் சிரிக்கிறார்)* வீரமிகு இளைஞர்களை ஒன்று திரட்டிப் போராடும் ஒரு போராளி வேடம்... அறிமுகப் பாடல் உள்ளிட்ட பல காட்சிகள் இருக்கு. எனது காட்சிகள் சுமார் 30 முதல் 45 நிமிடங்கள் வரை வரும் என்று நினைக்கிறேன். மார்ச் முதல் வாரத்தில் படம் வெளியாக வேண்டும். அதற்கு நேரம் ஒதுக்கி *(அதாங்க... கால்ஷீட்!)* முடித்துக் கொடுக்க வேண்டும்.

**அந்த அன்புத் தோழி வருவது இருக்கட்டும்... உங்கள் 'அன்புத் தோழி' எப்போது வரப் போகிறார்...?**

என்னுடைய அம்மா மற்றும் உறவினர்கள் எல்லாரும் கூட்டமாக வந்து ஒரு நாள் இது சம்பந்தமாகப் பேசினார்கள்... நானும் வழக்கம்போல், 'சொல்றேன்'ன்னு தப்பிக்கப் பார்த்தேன்... ஆனால் யாரும் விடவே இல்ல... ஒரு முடிவு தெரிஞ்சாகணும் என்றார்கள்... சரி... தேர்தல் முடியட்டும்... முடிந்த உடனே பேசிக்கலாம் என்றேன். அப்பவும் விடாமல், 'என்ன மாதிரி முடிவுன்னு இப்பவே சொல்லிப்புடு' என்றார்கள். 'சரி... நல்ல முடிவையே சொல்கிறேன்' என்றேன். *(முகத்தில் குறும்பான புன்னகை)*

- **இரா. முத்துக்குமார்**

படம் : **ஸ்ரீஹரி**

# கிளி வேட்டை!

**ஏ**ராளமான வட இந்திய அழகிகளைத் தமிழுக்கு இறக்குமதி செய்த பெருமை இயக்குனர் சரணுக்கு உண்டு. மானு, அமோகா, ரிச்சா பலோட், ரகஸியா வரிசையில் சரணின் அடுத்த அன்பளிப்பு, அழகுக் கிளி காம்னா.

'கதாநாயகிகளை அறிமுகப்படுத்துவது பெரிய ரிஸ்க் ஆச்சே?' என்றால் தத்துவம் பேசுகிறார் சரண்.

"சினிமாங்கிறது எப்பவும் ஃப்ரெஷ்ஷா இருக்கணும். புது கதாநாயகியை ஒரு ரசிகன் திரையில் பார்க்கும்போது புது எதிர்பார்ப்பு ஏற்படும். கதாநாயகியைப் பிடிச்சு போச்சுன்னா படத்தையும் ரசிக்க ஆரம்பிச்சுடுவாங்க. தமிழ் ரசிகர்களுக்கு பிடிச்ச கதாநாயகியைத் தேடறது கொஞ்சம் சிரமமான வேலைதான். ஆனா இதுவரைக்கும் எனக்குப் பிடிச்ச பெண்களை ரசிகர்களுக்கும் பிடிச்சுருக்கு. காம்னாவும் கலக்குவாங்க பாருங்க" என்கிறார். விட்டால் ஸ்டாம்ப் பேப்பரில் கையெழுத்திட்டுத் தருவார் போல.

**ச**மீபகாலமாக கலவரக் காடாக காட்சித் தரும் தமிழ் சினிமாமீது மயிலிறகு தடவும் படம். 'இதயத்திருடன்' தானாம். ஒத்த கருத்துடையவர்கள்தான் காதலிப்பார்கள் என்கிற விதியை உடைத்து துருவங்களான ரவியும் காம்னாவும் 'லவ்'வுகிறார்களாம்.

அதுசரி, காதலுக்கென்று தனி இலக்கணம் ஏதாவது இருக்கிறதா என்ன?

- எழில்

கதவு திறந்தேயிருக்கு
வாங்க, வாங்க...

அ.தி.மு.க கூட்டணி

## முதல்வர் யார்?

மார்ச் மாதம் திருச்சியில் தி.மு.க. மாநாடு நடைபெறும் முன், தொகுதிப் பங்கீடு விவரங்கள் முடிவு செய்யப்பட்டுவிடும் என்கிறார் கருணாநிதி. மிகவும் சரி. அதற்குள் முடிவானால் தான் மே மாதம் வரவிருக்கும் தேர்தலுக்குக் கூட்டணி கட்சிகள் வியூகம் வகுத்து, திட்டமிட்டு உழைக்க முடியும்.

ஆனால், இவ்வளவு திட்டமிடலுக்கிடையே மிக முக்கியமான கேள்விக்கு தி.மு.க தலைவர் இன்னும் பதில் கூறவில்லை: தி.மு.க கூட்டணி முன்னிறுத்தும் முதல்வர் யார்?

கடந்த தேர்தலின் போதே கருணாநிதி தாம் ஓய்வு பெறப் போவதாக அறிவித்துவிட்டார். 'இதுவே நான் போட்டியிடும் கடைசித் தேர்தல்' என்று உறுதிபடவே சொல்லிவிட்டார்.

இன்றும் அந்நிலையில் அவர் உறுதியாய் இருக்கிறாரா என்று கேட்டால், அதை தி.மு.க பொதுக்குழுதான் முடிவு செய்ய வேண்டும் என்கிறார்!

பொதுக் குழு என்ன முடிவெடுக்கும்? எப்போது அம்முடிவு எடுக்கப்படும்? முதல்வர் யார்? கருணாநிதியா? ஸ்டாலினா? அல்லது தி.மு.கவின் வேறு மூத்த தலைவரா? - இந்தக் கேள்விக்கு விடை தெரியாமல்

அ) கூட்டணி கட்சிகள் எவ்வாறு தேர்தலை எதிர்கொள்ள முடியும்?



# கல்கி



2006 பிப்ரவரி 12
பார்த்திப தை 30
மலர் : 64
இதழ் : 28

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.




ஆ) மக்கள் எவ்வாறு வோட்டுப் போட முன்வருவார்கள்?

கூட்டணி கட்சியினர் யாருமே ஆட்சிப் பகிர்வில் ஆர்வம் காட்டவில்லை என்று கருணாநிதி திட்டவட்டமாகச் சொல்கிறார். இந்தக் கருத்து ஏற்கத்தக்கதாக இல்லை. 'ஆட்சியில் பங்களிக்கிறேன்' என்று தி.மு.க தலைவர் கூறினால் மற்ற கட்சியினர் 'வேண்டாம்' என்றா சொல்லுவார்கள்? ஒரு நாளும் கிடையாது!

ஆனால் அவர்கள் ஆர்வம் காட்டாதது ஏன்?

அறுதிப் பெரும்பான்மை பெறும் அளவில் தி.மு.கவுக்கே தொகுதிகளை ஒதுக்கிக் கொண்டு, மிச்சத் தொகுதிகளைப் பகிர்ந்தளிப்பதால்தான் ஆர்வம் காட்டவில்லை. கூட்டணி ஆட்சி தமிழகத்தில் கிடையாது என்று தி.மு.க தரப்பில் அடித்துப் பேசப் படுவதால் ஆர்வம் காட்டவில்லை - அவ்வளவே!

கூட்டணி கட்சிகள் மாநிலத் தேர்தலில் வோட்டுகளைக் குவிக்க உழைக்க வேண்டும்; ஆனால் ஆட்சியில் மட்டும் பங்கு கிடையாது என்பது ஏற்கக் கூடிய நியாயம் அல்ல.

மத்திய அரசில் தனக்கு இருக்கும் எண்ணிக்கை பலத்தையும் செல்வாக்கையும் மாநில அரசியலில் தி.மு.க தலைமை பயன்படுத்திக் கொள்ள முயல்வதும் ஆரோக்கிய மானதல்ல.

போகிற போக்கைப் பார்த்தால், இடது சாரிகளின் அதிருப்தியை ஒன்றன்பின் ஒன்றாகப் பல விஷயங்களில் சம்பாதித்து வரும் மத்திய அரசே இன்னும் எவ்வளவு காலம் நீடிக்கும் என்ற கவலை தான் மேலோங்குகிறது.

தி.மு.க தனித்துப் போட்டியிட்டு ஜெயிக்க முடியுமா? இன்றைய சூழலில் அது சாத்தியமில்லை. கூட்டணியின் இதர கட்சிகள் தி.மு.கவுடன் இணைவதால் எந்த அளவுக்குப் பயனடையுமோ அதே அளவுக்குத் தி.மு.கவும் இதர கூட்டணி கட்சிகளால் பயனடையும். இந்த பரஸ்பர சார்பு நிலைதான் நிதர்சனம், யதார்த்தம்.







ஜெயலலிதா எதிர்ப்பு என்கிற பொதுநோக்கு தி.மு.க அணியின் அனைத்துக் கட்சிகளுக்கும் இருக்கிறது. ஆனால் இது போதாது. ஆக்கபூர்வமான பொதுநோக்கும் குறைந்தபட்ச செயல் திட்டமும் வகுக்கப்பட வேண்டும். அந்தச் செயல்திட்டத்தைப் பிரதானமாக்கி தி.மு.க கூட்டணி தேர்தல் களத்தில் இறங்கினால்தான் மக்களின் நம்பிக்கையைப் பெற முடியும். இப்படி ஒரு செயல்திட்டம் வகுக்கப்படுவதுடன் அடுத்த முதல்வர் யார் என்பதும் தெளிவுபடுத்தப்பட வேண்டும்.

'முதல்வர் யார்' என்பதை இப்போதே அறிவிப்பதன் மூலம் எதிர்ப்பும் பிளவும் ஏற்படும் என்றும் தி.மு.க தலைமை கருதலாம். ஸ்டாலினை முதல்வராக முன்னிறுத்துவது வைகோவுக்கு மட்டுமென்ன, வேறு சில கட்சியினருக்கும்கூட ஏற்புடையதாக இல்லாமல் போகலாம். ஆனால், இந்தப் பிரச்னையைத் தேர்தலுக்குப் பிறகு சந்திப்பதற்குப் பதில் தேர்தலுக்கு முன்பு சந்திப்பதே நல்லது.

மேலும், முதல்வர் யார் என்று அறிவிக்கப்படாத நிலையில், தி.மு.க கூட்டணி தேர்தல் களத்தில் இறங்குமேயானால், தி.மு.க உட்பட எந்த கட்சித் தொண்டரும் உற்சாகத்துடன் உழைக்க மாட்டார்!

'யார் முதல்வர் என்பதையே அறியாத ஒரு கூட்டணிக்கா வோட்டுப் போடப் போகிறீர்கள்?' என்று அ.தி.மு.கவினர் பிரசாரம் செய்ய ஏதுவாகிப் போகும்.

வாக்காளர்களும் முகமறியாத ஒரு முதல்வருக்கு வோட்டுப் போடுவதைக் காட்டிலும் ஜெயலலிதாவுக்கு வோட்டுப் போடலாம் என்று முடிவெடுக்கக் கூடும்.

கருணாநிதி முதல்வராகவும் ஸ்டாலின் துணை முதல்வராகவும் இருப்பார்கள் என்று ஒரு 'சமாளிப்பு' முடிவைக் கூட தி.மு.க அறிவிக்கலாம். எந்த முடிவும் இல்லாத அந்த கார நிலையைக் காட்டிலும் இது ஏற்புடையதாக இருக்கும். ○

# மீண்டும் வணக்கம்!

'மனைவி' சீரியலின் போது செட்டில் சீனியர் நடிகர்கள் - நடிகைகளைத் தவிர மற்றவர்களிடம் குறைந்தபட்ச புன்னகையைக் கூட சிந்துவதில்லையாம் கௌசல்யா.



சின்னத் திரை ஹீரோக்களில், விளம்பர சான்ஸ் மற்றும் மேடை நிகழ்ச்சித் தொகுப்பு வாய்ப்பு ஆகியன அதிகம் கிடைப்பது விஜய் ஆதிராஜுக்குத்தானாம்.

ஜெயா டி.வி.யில் 'கோலிவுட் கோர்ட்' நிகழ்ச்சியை அசத்தலாக நடத்தி வரும் அபிஷேக்கை, மேலும் சென்சேஷனலாக நிகழ்ச்சி நடத்த ஊக்கம் தந்துள்ளதாம் நிர்வாகம். இதனால் குஷி மூடில் இருக்கிறார் அபிஷேக்.

சன் மியூசிக்கில் நிரஞ்சனா - மஹாலட்சுமி ராஜ்யம் தான் நடக்கிறது. ஆனால் இரு அம்மணிகளுமே இந்தியத் தொலைக்காட்சிகளில் குறைந்தது லட்சம் தடவையாவது கேட்கப்பட்ட கேள்விகளைக் கேட்டே இம்சிக்கின்றனர். கொஸ்டின் பேங்கை மாத்தினா நல்லாருக்கும்ல.. யோசிக்கறது...

ராஜ் டி.வி.யில் செய்தி ஒளிபரப்பு நின்று போனதில் பல சர்ச்சைகள் இருந்தது பழங்கதை. தற்போது இந்த டி.வி.யில் 'நியூஸ் டைம்' என்ற பெயரில் ஒரு நிகழ்ச்சியைத் துவங்கியுள்ளனர். அதில் நீண்ட இடைவெளிக்குப் பிறகு 'வணக்க்க்கம்' குரல் கேட்கிறது.

வேணு அர்விந்துக்கு டைரக்டர் ஆவதில் அதீத ஆர்வம் இருக்கிறது. அன்று நடிக்க வேண்டியதை முதல் நாளே ஹோம் ஒர்க் செய்துவிட்டு, படப்பிடிப்பின்போது டைரக்டரையே உன்னிப்பாகக் கவனித்து வருகிறார்.

- கலை





# வில்லனுக்கே சிக்கல்!

வடக்கிலிருந்தும் ஆந்திராவிலிருந்தும் அழகழகான ஹீரோயின்கள் மட்டும் வருவதில்லை. கூடவே உறுமுவதற்காகவே வில்லன்களும் லைன் கட்டி கோலிவுட்டுக்குள் நுழைந்து விடுகிறார்கள். ஆரியன் அப்படியல்ல. பெயர் வடக்குச் சாயவில் இருந்தாலும் சொந்த ஊர் வேலூர். தமிழ் ஹீரோக்களுடன் மல்லுக் கட்டுவதற்காகவே அப்பாவிடம் பொய் சொல்லிவிட்டு சினிமா ஆசையில் ரயிலேறியவர். 'ட்ரீம்ஸ்', 'திருப்பாச்சி', 'ஆறு' படங்களில் வில்லனாக நடித்த ஆரியன் கையில் இப்போது அரை டஜன் தமிழ்ப் படங்கள்.


• ஆரியன்

“அப்பா அம்மா டீச்சர்களா இருக்காங்க. குடும்பத்தில் எல்லோருக்கும் அரசாங்க உத்தியோகம். சினிமா பார்க்கிறதே தப்புன்னு நினைக்கறவர் எங்கப்பா. பி.ஏ. முடிச்சவுடனே சென்னையிலுள்ள கம்பெனியிலே வேலை கிடைச்சதா அப்பாகிட்ட பொய் சொல்லி, சினிமாக் கனவுகளோடு ரயிலேறினேன்.

நீண்ட போராட்டத்துக்குப் பிறகு கஸ்தூரிராஜா சார் என் ஆர்வத்தைப் பார்த்துட்டு 'ட்ரீம்ஸ்' படத்துல 'வில்லன் ரோல் இருக்கு பண்றியா?'ன்னு கேட்டாரு. வந்த வாய்ப்பை உதறலை. 'ட்ரீம்ஸ்' வெளி வந்த பிறகுதான் அப்பாகிட்ட சொன்னேன்.

'சினிமாவுல நீ நடிக்கறது ரொம்பப் பெருமையா இருக்குப்பா'ன்னு வாழ்த்தினாரு. அவர் காலைத் தொட்டுக் கும்பிட்டு இன்னும் முழு மூச்சா இறங்கினேன். என் நேரம், அதுக்கப்புறம் வாய்ப்புகள் சரியா அமையல. நிறைய படங்கள்ல வில்லனுக்குக் கைத்தடியா ஒரு ஓரத்துல நின்னுட்டு இருப்பேன். அப்போதான் திருப்பாச்சி வாய்ப்பு வந்தது. 'உடல்வாகு பத்தாதே'ன்னு டைரக்டர் பேரரசு சொன்னார். 'ஜிம்'ல வர்க் அவுட் செஞ்சு பத்து கிலோ ஏத்தினேன். 'திருப்பாச்சி'யில என் நடிப்புலயும் நல்ல வெயிட் கூடியிருக்குன்னு பாராட்டுக் கிடைச்சது.

எங்க ஷூட்டிங் லொகேஷனே ஏதாவதொரு செங்கல் சூளையிலோ, நிலக்கரி சுரங்கத்திலோ பாழடைஞ்ச பங்களாவிலோ தான் இருக்கும். சிம்லா, டார்ஜிலிங், ஸ்விட்சர்லாந்திலெல்லாம் ஹீரோயின்களோட டூயட் பாட ஹீரோக்களுக்குத்தான் கொடுத்து வைச்சிருக்கு. ஆனா, வில்லனா நடிக்கிறதும் ஒரு சவாலான விஷயம்தாங்க.

ஹீரோவைப் பார்த்தவுடனே ரொம்ப நல்லவர்னு நினைக்கிற மக்கள், எங்களை மட்டும் தப்பாவே பார்க்கிறாங்க. எனக்குப் பொண்ணு தேடறதுலயும் சிக்கல் வருது. அதனால எப்போ பிரகாஷ்ராஜ் மாதிரி புகழடையறனோ அப்ப கல்யாணம் பண்ணிக்கலாம்னு இருக்கேன்'' என்று சொல்லும் ஆர்யனுக்குப் பிடித்த வில்லன்கள் நானா படேகர், ரகுவரன்.

- ச.ந.கண்ணன்

# சோனியா ரிங்டோன்!



டெல்லியில் இருக்கும் போது மற்ற தலைவர்களைப் போல் இல்லாமல் முடிந்தவரை ஸ்வெட்டரைத் தவிர்த்து விடுகிறார் வாசன்.



இதுநாள்வரை தன் வீட்டில் பாதுகாப்புப் பணியில் ஈடுபட்டிருந்த காவல் துறையினரைத் திருப்பி அனுப்பிவிட்டார் இளங்கோவன்.



தமிழகம் முழுக்க காங்கிரசுக்கு வெற்றி வாய்ப்புள்ள 15 வன்னியர் தொகுதிகளை பட்டியல் போட்டு டெல்லிக்கு ஃபேக்ஸ் செய்யவிருக்கிறார் திண்டிவனத்தார்.



சுனாமிநிதி, வெள்ள நிவாரணம் தொடர்பாக நிதி அமைச்சகத்தின் நிலை குறித்து மக்களிடம் தெளிவுபடுத்த, கார்த்தி சிதம்பரம் - வள்ளல் பெருமான் இருவருக்கும் உத்தரவிட்டுள்ளார் ப.சிதம்பரம்.



படம் : ஸ்ரீஹரி

“சுட்டும் விழிச் சுடரே... எங்கள் அன்னை சோனியாவே...” என்ற ரீமிக்ஸ் பாடல்தான் வசந்தகுமாரின் செல்போனில் ரிங்டோனாக ஒலிக்கிறது.



தனது தொகுதிக்குள் வரும் ஆறு சட்ட சபைத் தொகுதிகளிலும், தேர்தல் பணிகளுக்காக ஆறு பொறுப்பாளர்களை நியமித்துள்ளார் மணி சங்கர் அய்யர்.

- கலை

# முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்

'நம்மைக் காட்டிலும் உயர்ந்தவர் ரைக்வர் என்று ஹம்ச பக்ஷிகள் சொல்கின்றனவே! அவர் யார்?' என்று ஜானஸ்ருதிக்கு ஆவல் ஏற்பட்டது.

தான் ஏழு அடுக்கு படுக்கையில் படுத்திருந்ததனாலே, ரைக்வர் பதினாலு அடுக்கு மஞ்சத்திலே படுத்திருப்பார் என்று நினைத்துக் கொண்டு விட்டான் ஜானஸ்ருதி. அவரைத் தேடிக் கண்டுபிடிக்கும்படி சேவகர்களையெல்லாம் அனுப்பி வைத்தான்.

அவர்களும் போய்த் தேடினால், "ரைக்வர் என்று யாருமே இல்லை" என்றுதான் எல்லா இடங்களிலேயும் சொன்னார்கள். கிராமங்கள் தோறும் தேடச் சொன்னான்; குக்கிராமங்கள் தோறும் தேடச் சொன்னான். எல்லா இடங்களிலேயும் தேடிப் பார்த்து விட்டு, கடைசியிலே ஒரு சேரிப் பிராந்தியத்திலே, குடிசைகளெல்லாம் இருக்கிற இடத்திலே ஒரு கட்டை வண்டிக்குக் கீழே கௌபீன வஸ்திர தாரியாக, உடம்பெல்லாம் புழுத்து நெளிய படுத்துக் கொண்டிருந்தார் ரைக்வர்!

பார்க்கவே அருவருப்பாக இருக்கிறார். வண்டிச் சக்கரத்திலே முதுகைத் தேய்த்துக் கொள்கிறார்.

"இவர்தான் ரைக்வர். இவரைத் தவிர ரைக்வர் என்று வேறொருவர் உலகிலே இல்லை" என்றார்கள். உடனே சேவகர்கள் நடுநடுங்கிப் போய்விட்டார்கள்.... போய் ஜானஸ்ருதியிடம் சொன்னார்கள். அவன் சொன்னான் :

"பக்ஷிகள் சொன்னது சரியாகத்தான் இருக்கும். அவர் எப்படிப்பட்டவராக இருந்தால் என்ன, அவருக்கு நாம் நிறைய கொடுக்க வேண்டும்" - இப்படிச் சொல்லிவிட்டு, எட்டு பெரிய தங்கத் தாம்பாளங்களை வைத்து அதிலே கோபுரமாக ரத்தினங்களைக் குவித்தான் ஜானஸ்ருதி. விலை மதிப்பில்லாத பட்டுப் பீதாம்பரங்கள் வைத்து, ஒரு ரதத்தையும் பூட்டி, ஸ்வர்ண கசிதமான அந்த ரதத்தோடு அவர் எதிரிலே வைத்து, "ஸ்வாமி, இதை நீங்கள் ஸ்வீகரிக்க வேண்டும்" என்று கேட்டுக் கொண்டான்.

அவர் அது மொத்தத்தையும் பார்த்தார். 'ஸர்வம் கீடவத் பாதிமே...' என்றார். - தன் உடம்பிலேயிருந்து ஒரு புழுவை எடுத்துப் போட்டு "எல்லாம் இந்தப் புழுவுக்குச் சமானம்!" என்றார்.

நாம் நன்றாக கவனிக்க வேண்டும் அவர் வார்த்தையை...

இதராளுடைய மனம் புண்படாமல் பேசக் கூடிய மகான் அவர். ஏனென்றால், பேசுவதென்பது சாமானியமான கலை அல்ல... மற்றவர்கள் மனம் புண்படும்படியாகப் பேசக் கூடாது என்கிறது சாஸ்திரம்.

இவன் வந்து ஏகமாக ஐச்வர்யத்தை வைத்து, 'ஏற்றுக் கொள்ள வேண்டும்' என்கிறபோது, அது மொத்தம் புழுவுக்குச் சமானம் என்றார்!

"அப்பா ஜானஸ்ருதே! உன்னுடைய நிலையிலே நீ காட்டும்படியான வஸ்துக்களெல்லாம் உயர்ந்ததாக இருக்கலாம். ஆனால், என்னுடைய நிலையிலே அவை எல்லாம் புழுவுக்குச் சமானம்தான்!"

"அப்படியானால்?" அவன் கேட்

# குறையொன்றுமில்லை

கிறான்... "இதையெல்லாம் புழுவாக நினைக்கக்கூடிய அளவுக்கு ஒரு நிலை இருக்கிறதா சுவாமி?" என்று கேட்கிறான்!

என்று உபநிஷத் சொல்கிறது.

நல்லவர்களோடு, உயர்ந்தவர்களோடு சேர்ந்தால் அவர்கள் உயர்த்தி வைப்பார்





"அது மொத்தத்தையும் விட்டு விட்டு வா, சொல்கிறேன்..." என்றார் ரைக்வர். ஜானஸ்ருதியும் மொத்த ஐச்வர்யத்தையும் கொடுத்துவிட்டு, எதுவுமற்றவனாய் ரைக்வரிடத்திலே வந்தான். வந்து அவரிடத்திலே உபதேசம் பெற்றுக் கொண்டான்.

ஸம்வர்க வித்யையிலே காட்டப்படுகிற நரசிம்ஹ உபாஸனையை அவரிடத்திலே உபதேசம் பெற்று, நேரே மோக்ஷத்தை அடைந்து விட்டான். மோக்ஷத்தைக் கொடுக்கும்படியான நரசிம்ஹ உபாஸனையை நேரே ரைக்வரிடத்திலே பெற்று, மோக்ஷமடைந்தான்

கள். அதனால் அத்தகையவர்களுக்கு ஸம்வர்க வித்யா ஸாது கோஷ்டி என்று பெயர். உயர்ந்த கோஷ்டியிலே வந்து இவன் சேர்ந்தான்.

ஜானஸ்ருதி ஏற்கெனவே நிறைய தானம் பண்ணியவன்தான். அந்த தானம் பண்ணியதற்குக் குபேர பதவி அவனுக்குக் கிடைக்கக் கூடும். ஆனால் அவன் மறுபடி பூலோகத்திலே பிறவியைத் தான் அடைய வேண்டும். பண்ணிய தானத்துக்காக மோக்ஷம் கிடைக்குமா!

ஆனால், இப்போது அவன் ரைக்வரை

எட்டாம் பாகம் 5

அடைந்ததனாலே, அவர் நல்ல ஞானத்தைக் கொடுத்தார். உபாஸிக்க வேண்டிய மூர்த்தியைக் காட்டிக் கொடுத்தார். அதனால் உபாஸித்தான், உயர்ந்த கதியை அடைந்தான். ஆகையினாலே, நல்லவர்களுடன் உயர்ந்தவர்களுடன் சேர்ந்தால் அவர்களுடைய அனுக்கிரஹத்தினாலே - ஆசார்ய அனுக்கிரஹத்தினாலே - சிறந்த ஞானம் ஏற்பட்டு உயர்ந்த கதியை அடையலாம். மறுபடியும் பிறவியில்லாத, சாஸ்வதமான நித்யானந்தத்தை ஜானஸ்ருதி அடைந்து விட்டானே! இது தானத்தினால் கிடைக்குமா? மற்றொன்றினால் கிடைக்குமா!

சிறந்த ஞானத்தினால் பகவானை தியானம் பண்ணியதாலேதான் நித்யானந்த நிலை கிடைத்தது.

இப்படிப்பட்ட உயர்ந்த யோகிகளால் தியானம் பண்ணப்படக்கூடியவன், ஸம்வர்க வித்யையிலே, ஸாமவேத உபநிஷத்தான சாந்தோக்ய உப நிஷத்திலே புகழப்பட்ட எம்பெருமானை ஹ்ருதயத்திலே மஹான்களும் யோகிகளும் தியானம் பண்ணுகிறார்கள்.

ஆகையினாலே, யோகோ யோக விதாம் நேதா - யோகிகளுடைய ஹ்ருதயத்திலே அவன் இருப்பதனாலே பகவானையே யோக: என்கிறது சஹஸ்ரநாமம்.

" 'யோக க்ஷேமம் வஹாம்யஹம்' என்று சொன்னவன் அவன்தானே?" என்று கேட்கிறார் ஆதிசங்கர பகவத் பாதாள்.

பகவத் கீதையிலே பகவான் சொன்னதுதான் 'யோக க்ஷேமம் வஹாம் யஹம்.'

''என்னையே நினைத்து, மற்றொன்றை நினைக்காமல், என்னிடத்திலேயே மனத்தை அர்ப்பணிக்கும்படியான உத்தம அதிகாரிகளின் யோக க்ஷேமத்தை நான் வகிக்கிறேன்'' என்றான்.

அசுவமேத பிரகரணத்திலே யோகத்தை நன்கு அழகாக எடுத்துச் சொல்லியிருக்கிறது.

பரதன் ராமனிடத்திலே பாதுகைகளைக் கேட்கிறபோது என்ன சொல்கிறான்:

"ஹே ராமா! இந்தப் பாதுகைகள் மேலே ஏறி நின்று அதை அடியேனுக்கு ஈந்தருள வேண்டும். இந்தப் பாதுகை தான் உலகத்துக்கு யோக க்ஷேமத்தை உண்டுபண்ணும்'' என்று அழகாகப்



பேசினான்.

எல்லோருக்கும் - உலகத்திலே அத்தனை பேருக்கும் - யோக க்ஷேமம் ஏற்பட வேண்டும்.

"எல்லோருக்கும் க்ஷேமமும் ஏற்பட வேண்டும்; யோகமும் ஏற்பட வேண்டும்'' என்கிறது வேதம்.

யோகம் வேறு; க்ஷேமம் வேறு. யோகம் என்றால் என்ன...?

"அவனுக்கு நன்றாக யோகம் அடிக்கிறது" என்கிறோம். யோகம் அடிக்கிறது என்றால்...?

புதிது புதிதாக, இத்தனை நாளாக இல்லாத பெருமைகளையெல்லாம் சேர்ப்பதுதான் யோகம். உயர்த்தி, நிறைய ஐச்வர்யம் எல்லாம் அவருக்கு



வந்து கொண்டே இருக்கும். அதனால் நல்லயோக தசை என்று சொல்கிறோம்.

அப்படியானால், யோகம் என்பது என்ன...? 'அப்ராப்தஸ்ய ப்ராதனம் யோகம்'- கிடைக்காததெல்லாம் கிடைப்பது யோகம்.

க்ஷேமம் என்றால்...?

ப்ராப்தஸ்ய லக்ஷணம் க்ஷேமம். இருப்பது போகாமல் ரக்ஷிக்கப்படுவது க்ஷேமம். புதிது புதிதாகக் கிடைப்பது யோகம்.

''இந்த இரண்டையும் அவனுக்கு நான் உண்டு பண்ணுகிறேன். புதியதாகப் பல விஷயங்களைக் கொடுத்து அவனை உயர்த்துகிறேன். க்ஷேமத்தோடு அவன் இருப்பான்'' என்று பகவான் சொல்லியிருப்பதனாலே, அவனை அனவரதமும் யார் சிந்திக்கிறார்களோ, அப்படிப் பட்டவர்களுக்கு யோக க்ஷேமம் உண்டாகிறது.

அந்த யோகிகளுக்கெல்லாம் ஹ்ருதயத்திலே உறையக்கூடிய யோகமாய் விளங்குபவன் பரமாத்மா. இந்த மாதிரி யோகமாய் வந்து அவர்களுக்கு விசேஷமாய் அனுக்கிரஹம் பண்ணக் கூடியவன் எம்பெருமான்தான். க்ஷேமமாய் இருக்கக் கூடியவனும் அவனே. க்ஷேமம் என்ற சப்தத்துக்கே பகவான் என்றுதான் அர்த்தம். வித்யாரண்யர் அப்படி பாஷ்யம் பண்ணுகிறார்.

'எனக்கு க்ஷேமம் ஏற்படட்டும்'- க்ஷேமம் என்றால், இருப்பது போகாமல் இருக்கட்டும். க்ஷேமமாகிற எம்பெருமான் எப்போதும் கூட இருந்து ரக்ஷிக்கட்டும் என்று அர்த்தம்.

க்ஷேம சப்தத்தினாலே சொல்லப்படக் கூடியவன் நாராயணன் - பரமாத்மா - என்பது தெரிகிறது.

ஆகையினாலேதான் யோகோ யோகவிதாம் நேதா என்ற திருநாமங்கள். யோகவித் என்றால் யார்..? அந்த எம்பெருமானை நன்கு உணர்ந்த யோக வித்துக்கள்.

அப்படிப்பட்டவர்களுக்கெல்லாம் யஜமானன் அவன்.

ஞானினாம் அக்ரகண்ய:

ஞானிகளுக்குள்ளே, மனத்தில் வைத்து எண்ணப்படக்கூடிய மகான்களுக்கெல்லாம் நேதாவாய்- எஜமானனாய் - விளங்கக் கூடியவன். ஞானிகளுக்கெல்லாம் ஈசுவரனாக இருக்கக் கூடியவன் அந்த எம்பெருமான். அவனை விரும்பக் கூடிய ஞானிகளிடத்திலே அன்பு உடையவன் என்பதுதான் 'யோகவிதாம் நேதா' என்ற சப்தத்தினால் சொல்லப்படுகிறது.

(வளரும்)



# இன்னைக்கில் ஒரு முத்தம்!

'நூற்றைம்பது கோடி மக்கள் தொகை கொண்ட முப்பத்தெட்டு நாடுகள் பங்கேற்ற முதல் உலகப் போர் 1918-ம் ஆண்டு நவம்பர் 11-ம் தேதி முடிவடைந்தபோது 95 லட்சம் பேர் கொல்லப்பட்டனர். இரண்டு கோடி பேர் படுகாயமடைந்தனர்.'

பழைய ஆங்கில செய்தித் தாளில் அச்சானதைப் படித்துக் கொண்டே ஆப்பிளையும், ஆரஞ்சுப் பழங்களையும் நன்றாகத் துடைத்து அடுக்கி பலகையை அழகு படுத்தினான் ராம். பழைய இங்கிலீஷ் பேப்பரை விரித்து அதில் பழங்களை அடுக்கினால் கவர்ச்சி அதிகம்.

"என்ன படம் பாத்துக்கிட்டு இருக்கே? வேலையைப் பாரு" கடை முதலாளியின் குரல் ரத்தக் கொதிப்பாக...

'சம்பளம் கொடுக்கிற நேரம் வந்துட்டாலே முதலாளி புத்தியைக் காட்டிடறாரு... என்ன பண்றது? நம்ம தலைவிதி. நான் படிச்ச படிப்புக்கு என்னென்னவோ நினைச்சேன். ஆபிஸர் ஆகணும்னு கனவு கண்டேன் ஆனா ஆண்டவன், ஆப்பிளையும் ஆரஞ்சையும் அடுக்க வைச்சுட்டான். இன்னைக்கு சேல்ஸ் ஆயிரம் ரூபாயைத் தொட்டுடுச்சு. இன்னைக்கி அஞ்சு ரூபாய் அதிகம் கிடைக்கும்னு நினைக்கிறேன். முதலாளி மனசு வைக்கணும்' நினைவு அலைகள் பல மனத்தில்.

"இந்தப்பா, சம்பளம் வாங்கிட்டு கிளம்பு. காலைல நாலு மணிக்கு வந்துடணும்."

பணத்தை வாங்கி எண்ணினான்...

"என்ன அறுவது ரூவா இருக்குல்ல?"

"ம்ம்... கூட அஞ்சு ரூபா தந்தீங்கன்னா..."

"வேணும்னா நைட்டும் வேலை பாரு, ரெண்டு சம்பளம் கிடைக்கும்."

சம்பளத்துடன் வீட்டுக்குப் புறப்பட்டான். மழை இலேசாகத் தூறிக் கொண்டிருந்தது.

'மழை தூறினாலே நம்ம பசு மாடு மேயப் போவாது இன்னைக்கி தீவனம் வைச்சு தான் பால் கறக்கணும். அந்த மாடுதான் குடும்பத்தைக் காப்பாத்துது. வறட்டிக் காசே மூணு மாசத்துக்கு ஒரு தரம் அறுநூறு கிடைக்குது. இன்னொரு பசு மாடு வாங்கினா நாம ராசாதான். பாய் கடையில ஏற்கெனவே பாக்கி கூடிக்கிட்டு இருக்குது. இன்னைக்கு என்ன சொல்லப் போறாரோ?'

வேகமாக சைக்கிளை மிதித்தான். பாயின் கடை வாசல்.



விநாயகசுந்தரம்

"ஸலாம் பாய்"

"ஸலாம் இருக்கட்டும் பாக்கி ஏற்கெனவே முந்நூறு ரூபாயைத் தாண்டிட்டு. இனிமே கடன் கொடுக்க முடியாது. இருக்குற காசுக்கு ஜாமான் வாங்கிட்டுப் போ"

"மூணு கிலோ குச்சித் தீவனம், மேரி பிஸ்கெட்"

"முதல்ல பணம் எவ்வளவு இருக்குன்னு சொல்லு"

"அறுபது ரூபாய் இருக்கு"

"தீவனம் மட்டும் போடுப்பா"

ஒரு தூக்குப் பையில் தீவனம் மட்டும் வாங்கி வீடு விரைந்தான்...

'நந்தினிகுட்டி மூணாவது படிச்சாலும் முதல் ரேங்க் வாங்குறா. இன்னைக்கு தின்பண்டம் வாங்க முடியாம போயிடுச்சே. நாளைக்கு அஞ்சு ரூபாய்க்கு வாங்கிக் குடுத்திடுவோம்.'

மிதிவண்டியை வராண்டாவில் நிறுத்திவிட்டு அண்டா நிறைய தண்ணீரை நிரப்பினான். குளித்து முடித்தான். மனைவி, கலா சமைத்துக் கொண்டிருக்க, நந்தினி, மாட்டுக்கு வைத்திருந்த குச்சித் தீவனத்தை சின்ன கிண்ணத்தில் அள்ளி வைத்து மொறுமொறுவென்று தின்று கொண்டிருந்தாள்.

"அப்பா... நீங்க இன்னைக்கு வாங்கிட்டு வந்தது சூப்பரா இருக்குப்பா"

கண்களில் நீர்த் திவலைகள்...

"சாப்பாட்டை எடுத்து வை கலா... ராத்திரி கடைக்குப் போகணும்" என்றபடி மகளை அணைத்து கன்னத்தில் முத்தமிட்டான். ●



**ஊ**ருக்குத் தெற்கே, தாமிரபரணி ஆறு சலசலத்து ஓடி வருகிறது. அங்கிருந்து மேற்கே பதினைந்து கி.மீ. ரவணசமுத்திரம். வடக்கே பத்து கி.மீ. ரங்கசமுத்திரம். கிழக்கே இருபது கி.மீ. கோபாலசமுத்திரம். இவற்றை எல்லாம் தன்னைச் சூழ வைத்துக் கொண்டு

# விலகாத காதல்!

மையப்படுத்தியிருக்கும் ஊரும் ஒரு சமுத்திரமாகத்தானே இருக்க வேண்டும்? ரொம்பவும் சரி. அதுதான், அம்பாசமுத்திரம். அங்கு கல்கி வாசகர்களில் ஒருவராக நமக்குக் காணக்கிடைத்தவர் சோம. மகாலிங்கம். வயது 63. ஓய்வுபெற்ற ஆசிரியர். அவர் மனைவி ஆவுடையம்மாளும் ஓய்வுபெற்ற ஆசிரியையே. அவர்களுக்கு இரண்டு பெண்கள். இருவருக்கும் திருமணமாகி விட்டது. மூத்த மகள் உலகம்மாள், சென்னை அம்பத்தூர் ரெங்கசாமி மேல்நிலைப் பள்ளியில் கணித ஆசிரியை. இளைய மகள் சுந்தரவல்லி கம்ப்யூட்டர் இன்ஜினியர். கணவருடன் சிங்கப்பூரில் வசித்து வருகிறார்.

**சோ**ம. மகாலிங்கத்தின் பூர்விகமே அம்பாசமுத்திரம்தான். தீர்த்தபதி உயர்நிலைப்பள்ளியில் பத்தாம் வகுப்பு தேறிவிட்டு, அங்கேயே இடைநிலை ஆசிரியர் பயிற்சியும் பெற்றவர். பத்தொன்பது வயதில், தான் இதுவரை பயின்று வந்த பள்ளியிலேயே இடைநிலை ஆசிரியராகப் பணியில் சேர்ந்து விடுகிறார். மாணவப் பருவத்திலிருந்தே அவருக்கு படிப்பு மீது அத்தனை தாகம். எட்டாம் வகுப்பு படித்துக் கொண்டிருக்கும் போதே இந்தியும் கற்றுக் கொள்கிறார். இடைநிலை ஆசிரியராகத் தேர்வாகி வரும் போது, அவர் இந்தியிலும் எம்.ஏ. வரை தேறி விடுகிறார்.

இடைநிலை ஆசிரியராகப் பணிபுரிந்துகொண்டே, அஞ்சல் வழிக் கல்வியில் எம்.ஏ., ஆங்கில இலக்கியம் பயின்றார். அதன் பின்னர் ஓராண்டு எம்.எட்., பயின்று தேர்ச்சி பெற்றிருக்கிறார். "தமிழ், இந்தி, ஆங்கிலம் என அத்தனை கல்வி பயிலும் தாகத்துக்கும் உந்துசக்தியாய் அமைந்திருந்து அமரர் கல்கியின் எழுத்துக்களை வாசிக்கத் துவங்கியதுதான்" என்கிறார் சோம.மகாலிங்கம்.

**க**ல்லிடைக்குறிச்சியில் பிறந்தவர் ஆவுடையம்மாள். அம்பாசமுத்திரம், இந்து துவக்கப் பள்ளியில் ஆசிரியராக வந்து சேர்கிறார். சோம. மகாலிங்கத்தின் உறவுக்காரப் பெண் ஆவுடையம்மாள். அப்புறம் என்ன? பெற்றோர் பார்த்து நிகழ்த்தி வைக்கப்படுகிறது அவர்களது திருமணம். அதற்குப் பின்னரும் மகாலிங்கத்தின் முதல் காதல், அந்த இரு விஷயங்களிலிருந்து விலகவே இல்லையாம்.

"அமரர் கல்கியின் படைப்புகளை வாசிப்பது, விரும்பி

வாரம் ஒரு வாசகர் குடும்பம்

வருபவர்களுக்கு இந்தி மொழிப் பயிற்சி தருவது. இந்த இரண்டிலிருந்தும் என் கணவர் இன்று வரை விலகாமல் தொடர்ந்து இயங்கி வருகிறார்" என்கிறார் ஆவுடையம்மாள்.

சோம. மகாலிங்கத்துக்கு ஆன்மிகத்திலும் அதிக நாட்டம் உண்டு. பட்டிமன்ற பேச்சாளர் வேறு.

"சமீபத்தில் விக்கிரமசிங்கபுரம் கோயில் திருவிழாவில் நவராத்திரி பட்டிமன்றம். இவர்தான் நடுவர். நானும் பட்டிமன்றம் கேட்டு வரலாமே என்று அவருடன் சென்றிருந்தேன். 'வாழ்க்கை என்பது பூந்தோட்டமே! போராட்டமே!' எனத் தலைப்பு. அதில் போராட்டமே என்கிற அணியில் பேச வேண்டியவர்களில் ஒருவர் அன்று வராமல் போய் விடவே கடைசி நேரத்தில் என்ன செய்வது என்றே புரியவில்லை. அரை மணி நேரம்தான் இருக்கிறது பட்டிமன்றம் துவங்க. பார்ததார் என் கணவர். அந்த ஊர் கல்லூரி மாணவி ஒருவரைத் தேடிப் பிடித்தார். பட்டிமன்றத்தின் தலைப்பை ஒட்டியும் வெட்டியும் சில கருத்துகளை அந்தப் பெண்ணிடம் சொன்னார். ஒருவழியாகப் பட்டிமன்றம் நடந்து முடிந்தது. என்ன ஆச்சரியம் தெரியுமா? அந்த இரு அணிப் பேச்சாளர்களிலேயே, அந்தக் கல்லூரி மாணவியின் பேச்சுதான் மிகவும் சிறப்பாக அமைந்திருந்தது!

"ஆன்மிகச் சொற்பொழிவுகளுக்கும் அவ்வப்போது சென்று வருவார் என் கணவர். முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சாரியாரின் 'குறையொன்றுமில்லை' தொடரில் வருகின்ற விஷயங்களை அப்படியே தன் பேச்சின் இடையிடையே குறிப்பிட்டுப் பேசுவார். எங்கள் இருவருக்குமே 'எம்.எஸ். நினைவுகள்' தொடர் நிரம்பவும் பிடிக்கும். ஒவ்வொரு வாரமும் சென்னையில் வசிக்கும் என் மூத்த மகளுக்கு போன் செய்து எம்.எஸ். தொடர் படிச்சியானு கேட்பேன்" எனக் கூறுகிறார் ஆவுடையம்மாள்.

கட்டுரை, படம்:
**ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**



**"ஒவ்வொரு வாரமும் சென்னையில் வசிக்கும் என் மூத்த மகளுக்கு போன் செய்து எம்.எஸ். தொடர் படிச்சியானு கேட்பேன்"**



# ஆரோக்கியம் அவசியம்!

இரண்டு நாட்களுக்கு முன் ஒரு கல்லூரி மாணவரைச் சந்தித்தேன். "படிப்பை நாங்க கடவுளா நினைக்கிறோம் சார். இதை எங்க வீட்டிலே புரிஞ்சுக்கவே மாட்டேங்கறாங்க'' என்றார். ''எப்படிச் சொல்றீங்க'' என்றேன். "கோவில்லே கூட்டுப் பிரார்த்தனை நடத்தினா அதுக்கு சக்தி அதிகம் தானே? அதே மாதிரி நாங்க கம்பைன் ஸ்டடி பண்ணக் கிளம்பினா வீட்டிலே விட மாட்டேங்கறாங்க" என்றார் அவர்.

படிப்பு மட்டும் என்றில்லை. எதையுமே கூட்டாகச் செய்வது இளைஞர்களின் இயல்பு. கல்லூரியில் நடக்கிற விழாக்களாகட்டும், அவரவர் துறை அளவில் நடக்கும் நிகழ்ச்சிகளாகட்டும், அவற்றில் எல்லாம் மாணவர்கள் கூட்டாக இயங்குகிறபோது பாடத்திட்டங்

## வானவில் வயசு – 5



களில் இல்லாத பல அம்சங்களைக் கற்றுக் கொள்கிறார்கள்.

கல்லூரி மன்றங்களில் பெரும்பாலும் இரண்டு விழாக்கள் கண்டிப்பாக நடக்கும். ஒன்று - தொடக்க விழா. இன்னொன்று நிறைவு விழா. இவை தவிர சின்னச் சின்ன சங்கங்களும் கல்லூரிகளில் தொடர்ந்து இயங்குவதுண்டு.

பல கல்லூரிகளில் பேச்சாளர்களை, தமிழ் சினிமாவில் வருகிற போலீஸ் மாதிரி தான் நினைக்கிறார்கள். எல்லாம் முடிந்து நிறைவு விழா என்ற பெயரில் சான்றிதழ்கள் கொடுக்கக் கூப்பிடுவார்கள்.

அந்த நேரம் பார்த்துத்தான் எங்களுக்கும் புதிது புதிதாக ஏதாவது யோசனைகள் வந்து தொலைக்கும். "நீங்கள் அப்படிச் செய்யலாம். இப்படிச் செய்யலாம்" என்று ஆவேசமாக அறிவுரைகள் சொல்லிவிட்டு வியர்வை வழிய அமர்வோம். செமஸ்டர் கலவரத்தில் இருக்கும் சஞ்சய் ராமசாமிகளுக்கு இதெல்லாம் ஞாபகமா இருக்கப் போகிறது? (செமஸ்டர் என்றாலே சில கஜினி படையெடுப்புகளும் உண்டுதானே!)

**கோ**வை பி.எஸ்.ஜி. கலை அறிவியல் கல்லூரியில் வாரா வாரம் 'நிலா முற்றம்' என்கிற கூட்டம் நடக்கும். புத்தகத் திறனாய்வு, கவிதை வாசித்தல் போன்ற அம்சங்கள் இடம்பெறும். அதன் நிறைவு விழாவுக்கு அழைத்திருந்தார்கள். வாசலில், பன்னீர், கல்கண்டு, சந்தனம் சகிதமாய் வரவேற்க சில மாணவ-மாணவிகள். விழா தொடங்கியது. வரவேற்புரை முடிந்ததும் மூன்று மாணவர்கள் எழுந்து வெளியே போனார்கள். சட்டமன்றம் மாதிரி வெளிநடப்பு செய்கிறார்களோ என்று பார்த்தால், வரவேற்பில் நின்றவர்களை உள்ளே அமரச் சொல்லிவிட்டு இவர்கள் நின்று கொண்டார்கள். தலைமையுரை முடிந்து பரிசளிப்பு தொடங்கியதும் இன்னொரு செட் வாசலுக்குப் போனது. வெளியே நின்றவர்கள் உள்ளே வந்தார்கள். என் சிறப்புரையின்போது எல்லோரும் வெளியே போய்விடுவார்களோ என்று பயந்தேன். நல்ல வேளை. எல்லோருமாக உள்ளே வந்து உட்கார்ந்து கொண்டார்கள்.



விழா நடத்தும் இளசுகளுக்கு மத்தியில் இப்படியொரு புரிதலும் அன்பும் ஒருவருக்கொருவர் விட்டுக் கொடுக்கிற ஏற்பாடும் இருப்பது சந்தோஷமாக இருந்தது.

**இ**ன்று பன்னாட்டு நிறுவனங்கள் பலவற்றிலும் பெரிதாகப் பேசப்படுவது, கூட்டாகச் செயல்படுதல் (Team Work). இது நிறுவனங்களின் பயிற்சியால் வருவதைவிட நட்பின் முதிர்ச்சியால் வருவதே நல்லது. அதுதான் நீடித்திருக்கும்.

சேர்ந்து படிக்

கும்போது, ஒரு மாணவருக்குத் தெரியாத ஒன்றை இன்னொரு மாணவர், "டேய்! அது ஒண்ணுமில்லேடா!'' என்று சொல்லிக் கொடுக்கிறார். வகுப்பறையில் புரியாததெல்லாம் நண்பனின் அறையில் நன்றாகப் புரிகிறது. சேர்ந்து படிப்பதில் இருக்கிற முக்கிய அம்சம், பரஸ்பரம் பகிர்ந்து கொள்வது. ஏன் தெரியுமா? தேர்வில் இருக்கிற மதிப்பெண்கள் பொது. இவர் மதிப்பெண் வாங்குவதால் அவர் வாங்கப்போகிற மதிப்பெண் குறைந்து விடாது. இந்தச் சூழலில் பகிர்ந்து கொள்வதொன்றும் பெரிய விஷயமில்லை.

இதே இரண்டு மாணவர்கள், நாளை ஒரே நிறுவனத்தில் மார்க்கெட்டிங் துறையில் சேர்கிறார்கள் என்று வைத்துக் கொள்வோம். ஒருவரை ஒருவர் முந்திச் செல்ல வேண்டும் என்ற ஆர்வத்தில் செயல்பட்டால் அதற்குப் பெயர் போட்டி. இன்னொருவர் ஜெயித்து விடக் கூடாது என்று கங்கணம் கட்டிக் கொண்டு செயல்பட்டால் அதற்குப் பெயர் பகை. போட்டி இருக்கலாம். பகை கூடாது. "ஆரோக்கியமான போட்டி என்றால் என்ன?'' என்று ஒருவரிடம் கேட்டேன். அவர் சொன்னார், "WWF சேனல் பார்த்திருக்கீங்களா? மலை மலையா மூணு நாலு மல்யுத்த வீரர்கள் மோதிக்குவாங்களே, அதுதான் ஆரோக்கியமான போட்டி'' என்று. இவரிடம் நான் கேட்காமலேயே இருந்திருக்கலாம்.

சோளம் விதைத்து விவசாயம் செய்வதில் ஒருவர் தேசிய அளவில் விருது வாங்கினார். அவரது வெற்றியின் ரகசியம் என்னவென்று நிருபர்களெல்லாம் கேட்டார்கள். "தரத்தில் உயர்ந்த சோள விதைகளை வாங்கி என் வயலில் விதைத்தேன். அதுமட்டுமல்ல... அதே சோள விதைகளை என் அக்கம் பக்கத்தில் உள்ள வயல்களுக்கும் கொடுத்தேன். அதுதான் என் வெற்றியின் ரகசியம்'' என்றார். நிருபர்களுக்குப் புரியவில்லை. அவரே விளக்கினார். "நான் என்னதான் தரமான சோள விதைகளை விதைத்தாலும் சரி, பக்கத்து வயல்களில் இருந்து காற்றில் உருண்டு வருகிற விதைகள் தரம் குறைந்தவையாக இருந்தால், என் விளைச்சலின் தரம் கெட்டுவிடும். என் விளைச்சல் தரமாக இருக்க வேண்டுமென்றால் என் சூழ்நிலையின் தரம் சிறப்பாக இருக்க வேண்டுமென்று முடிவு செய்தேன். அதனால் ஜெயித்தேன்'' என்றார்.

இதற்குப் பெயர்தான் ஆரோக்கியமான போட்டி. தொழிலில் ஒருவருக்கொருவர் போட்டி போடலாம். ஆனால் தாங்கள் சார்ந்திருக்கும் துறையின் நன்மை என்று வரும்போது கைகோத்துக் கொள்ள வேண்டும்.

போட்டி மனப்பான்மை வெற்றியைக் கொடுக்கும். பகை மனப்பான்மை வளர்ச்சியைக் கெடுக்கும். கல்லூரித் தேர்தலாக இருக்கட்டும், வாழ்வாக இருக்கட்டும். ஆரோக்கியமான போட்டிகளிலேயே பங்கெடுங்கள். வெற்றி பெறுங்கள்.

(தொடரும்)

படங்கள் :
**டிஜிட்டல் சண்முகம்**

"நான் ஆபீஸ் விஷயமா ஒரு வாரம் டூர் போகப் போறேன்...!"

"போகும்போது என்னை புடவைக் கடையில டிராப் பண்ணிட்டுப் போங்க.... திரும்பி வரும்போது பிக்கப் பண்ணிக்குங்க!"

- அ.ஜெயேந்திரன்



# போட்டுத் தாக்கு!

இன்ஸமாம் உல் ஹக்கிடம் கேட்கக் கூடாத
பத்துக் கேள்விகள் :

1. பாகிஸ்தான் பிட்ச்சுல பாய் விரிச்சு படுத்துக்கிட்டு ஆடினாக் கூட செஞ்சுரி அடிக்கலாமாமே?

2. ஏனோ சேப்பலைப் பார்த்தா மட்டும் உங்களுக்குக் கோபம் கோபமா வருமாமே?

3. குண்டுகளுக்கு மத்தியில வாழ்றதாலதான் நீங்களும் குண்டா இருக்கீங்களா?

4. 'கங்கூலி கான்'னு மாத்திட்டு வாங்க. பாகிஸ்தான் டீம்ல சேர்த்துக்கறோம்னு சவுரவை ஓரங்கட்டுறீங்களாமே?

5. தமிழ் உயிரெழுத்தோட கடைசியெழுத்தும் உங்க பேரோட கடைசி எழுத்தும் எப்டிங்னா ஒரே மாதிரி இருக்கு?

6. எங்க ஊரு பக்கோடா காதரோட கஸின் பிரதர்தான் உங்க ஊரு அப்துல் காதிராமே?

7. 'பாகிஸ்தான் வீரர்களெல்லாம் விவேகானந்தாக்குப் போய் ஸ்போக்கன் இங்கிலீஷ் படிங்க'ன்னு கோச் துரத்தறாராமே?

8. 'மேட்ச் ஃபிக்ஸிங்' பண்ற தரகர்களை உங்களுக்கு ரொம்பப் பிடிக்கும்தானே?

9. சோயிப் அக்தருக்கு யாரு களுக்கு எடுக்கறதுன்னு சேவாக்குக்கும் டோனிக்கு மிடையே பெரிய ஃபைட்டே நடக்குதுபோல?

10. உங்க விக்கெட்டை பௌலர்களால வீழ்த்தறது ரொம்ம்ம்பக் கஷ்டமாமே. அதாவது அதுக்குள்ள ரன் அவுட் ஆயிடுவீங்கதானே?

—பரமு

### மேஷம்:

தனம், குடும்பம், வாக்கு, கல்வி மேலோங்கும். வீடு வாங்கும் யோகம் கிட்டும். குடும்ப வாழ்வு நன்றாக இருக்கும். குழந்தைப் பேறு கிட்டும். உத்தியோகத்தில் உழைப்புக்கு ஏற்ற வருமானம் கிடைக்கும். சிலருக்கு வெளிநாடு செல்லும் வாய்ப்பு வீட்டுக் கதவைத் தட்டும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். வியாபாரிகள் நற்பலனை அடைவார்கள், நண்பர், உறவினர்கள் மூலம் ஆதாயம் கிடைக்கும். ஆஞ்சநேயர் வழிபாடு நற்பலனைத் தரும்.



# நடக்குமென்பார்; நடக்கும்!

தஞ்சை பரத்வாஜ்

**5.2.2006 முதல் 11.2.2006 வரை**



### ரிஷபம்:

நினைத்தது நடக்கும். தனவிருத்தி உண்டாகும். அநாவசியமான செலவுகள் ஏற்படாது. உடல் நிலை நன்றாக இருக்கும். உத்தியோகத்தில் இருந்து வந்த நெருக்கடிகள் குறையும். வேலை தேடுபவர்களுக்கு உடன் வேலை கிடைக்கும். மனக்குழப்பம் தீரும். தொழில் துறையில் லாபத்தை ஏற்படுத்தும். வழக்கு வெற்றிப் பாதையில் செல்லும். புதிய முயற்சிகள் கைகூடும். திருமணம் கைகூடும். குரு / கேது / ராகு வழிபாடு நலம் தரும்.

### மிதுனம்:

சுபநிகழ்ச்சி கைகூடும். கடன் தொல்லை தீரும். புதிய வீடு, வாகனம் வாங்கலாம். நண்பர், உறவினர் மூலம் அனுகூலம் ஏற்படும். மாணவ / மாணவிகள் படிப்பில் முன்னேற்றம் அடைவார்கள். உடல் நிலை பாதிக்காது. சிலருக்கு வீடு வாசல் மாற்றம் ஏற்படும். கணவன் - மனைவி உறவு நன்றாக இருக்கும். குழந்தை பாக்கியம் ஏற்படும். மனசஞ்சலம் இராது. சத்ரு தொல்லை விலகும். புதிய தொழில் தொடங்கலாம். ராகு / கேது வழிபடுதல் நலம்.

### கடகம்:

உடல் நிலை நன்றாக இருக்கும். பண கஷ்டம் வராது. சிலருக்குத் திடீர் பிரயாணம் அமையும். உத்தியோகஸ்தர்களுக்கு நல்ல உயர்வு ஏற்படும். செலவுகள் சுபமானதாக இருக்கும். கணவன் - மனைவி உறவு நற்பலனைத் தரும். சிலருக்கு ஸ்திர சொத்துக்கள் வாங்கும் வாய்ப்பு உள்ளது. மாணவ / மாணவிகள் படிப்பில் முன்னேற்றம் காண்பார்கள். வழக்கு வெற்றி பெறும். வியாபாரத்தில் நல்ல லாபம் கிடைக்கும். சனி / குரு

❖ **நான் கொடுத்த பணம் திரும்பக் கிடைக்குமா? வழக்கு வெற்றி பெறுமா?**

**ஆர். நாராயணசாமி,**
**கோவை**

உங்களுக்கு தற்பொழுது புதன் தசை நடப்பதால் கொடுத்த பணம் திரும்பக் கிடைக்கும். வழக்கு வெற்றி வாகை சூடும். பொருளாதார கஷ்டம் விலகும். கடந்த 19 வருடங்களாக சனி தசை நடந்து முடிந்துள்ளது. இனிமேல் கவலையில்லை. நினைத்தது நடக்கும்.

❖ **என் மகனுக்கு எப்பொழுது திருமணம் நடக்கும்? திருமண வாழ்வு எப்படி அமையும்?**

**- பா. முத்துலிங்கம்,**
**மதுரை**

உங்கள் மகனுக்கு தற்போது ராகு தசை சுக்ரபுத்தி நடப்பதால் அவர் யாரையும் விரும்பித் திருமணம் செய்து கொள்ளும் வாய்ப்பு இல்லை. 1.4.2006க்குப் பிறகு திருமணம் கைகூடும். ஒரே துறையில், படித்த, பண்புள்ள பெண் அமைவாள். உறவில் திருமணம் அமையாது. இல்லற வாழ்வு நன்றாக இருக்கும்.

❖ **என்னுடைய சரும வியாதி நிரந்தரமாகக் குணமாகுமா?**

**- எஸ். கிருஷ்ணமூர்த்தி,**
**சென்னை - 61**

உங்கள் ஜாதகப்படி சனிதசை நடைபெற்று வருகிறது. சனி பகவான் லக்னத்தில்

வழிபாடு சிறந்தது.

**சிம்மம்:**

பண வரவு காத்திருக்கிறது. வேலைப் பளு அதிகம் இருக்கும். தடைகள் விலகும். கணவன் – மனைவி உறவு விட்டுக் கொடுத்து போவது நல்லது. தனவிருத்தி ஏற்படும். மாணவ / மாணவிகள் படிப்பில் அக்கறை செலுத்தலாம். கைப் பொருள் மீது கவனம் தேவை. வியாபாரத்தில் போட்டி நிலவும். உடல் நிலையில் கவனம் தேவை. வண்டி வாகனத்தில் செல்லும் போது உஷார். வழக்கு வெற்றி பெறும். தன பிராப்தி கிட்டும். ராகு / கேது / குரு / சனி ப்ரீதி செய்து வரவும். நற்பலன் கிட்டும்.

**கன்னி:**

ஆரோக்கியத்தில் முன்னேற்றம் ஏற்படும். சுபகாரியம் கை கூடும். திருமணம் கைகூடும். குழந்தை பாக்கியம் கிட்டும். நண்பர், உறவினர்களால் ஆதாயம் இருக்கும். வியாபாரத்தில் நல்ல முன்னேற்றமான சூழ்நிலை ஏற்படும். உடல் நிலை பாதிக்காது. புதிய தொழில் துவங்க நல்ல நேரம். சிலருக்கு வீடு வாங்கும் யோகம் கிட்டும். வழக்கு வெற்றி பெறும். வேலை இல்லாதவர்களுக்கு புதிய வேலை கிடைக்கும். பூர்விக சொத்து பாகப்பிரிவினை ஏற்படும். ராகு / கேது / வழிபட்டு வருதல் நலம்.

**துலாம்:**

சுப நிகழ்ச்சி கை கூடும். தனம், வாக்கு, கல்வி வனம் மேலோங்கும். குடும்ப வாழ்வு ஒற்றுமையாக இருக்கும். திருமண காரியம் கைகூடும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். புதிய முயற்சி கைகூடும். உத்தியோகத்தில் நல்ல மாறுதல் ரெடி. பதவி உயர்வு ஏற்படும். கணவன்/ மனைவி உறவு நன்றாக இருக்கும். குழந்தை பாக்கியம் கிட்டும். வழக்கு வெற்றி பெறும். வியாபாரத்தில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். மனசலனம் தீரும். குரு/சனி வழிபாடு நற்பலனை அளிக்கும்.

**விருச்சிகம்:**

தனம், வாக்கு, வித்தை மேலோங்கும். கணவன் – மனைவி உறவு நன்றாக இருக்கும். சிலருக்கு வெளிநாடு செல்லக் கூடிய வாய்ப்புக் கிட்டும். பத்திரிகையில் பெயர் வரும். மகப்பேறு பாக்கியம் கிட்டும். ஆரோக்கியம் பாதிக்காது. உத்தியோகத்தில் பதவி உயர்வு வரும். உழைப்புக்கு ஏற்ற பணம் பெறுவீர்கள். மன தைரியமும் தன்னம்பிக்கையும் ஏற்படும். சத்ரு தொல்லை விலகும். செலவுகள் கட்டுக்குள் அடங்கும். பாகப்பிரிவினை ஏற்படும். தந்தையை விட்டுப் பிரிந்து செல்ல

12-ல் அமர்ந்து புதன் சாரம் பெற்று விளங்கு வதால் உடலில் சரும வியாதியை உண்டு பண்ணுவான். இது சனிதசை முடியும் வரை இருக்கும். வைதீஸ்வரன் கோவில் சென்று உப்பு, மிளகு வாங்கிப் போடுகிறேன் என்று வேண்டிக் கொண்டால் சீக்கிரம் குணம் ஆகும்.

❖ எனது மகளுக்கு எப்போது திருமணம் நடைபெறும்?

ஆர். ராஜகோபால்,
சென்னை - 4

உங்கள் பெண்ணுக்கு வெளிநாட்டு வரன் அமையும். நாகதோஷம் உள்ள வரனைப் பார்க்கவும். 2006-ல் திருமணம் கைகூடும். படித்த, நல்ல வேலையிலுள்ள வரன் அமையும்.

❖ எனது மகளின் கல்வி, திருமணம் பற்றிக் கூறவும்...

- ஆர். நாராயணன்,
சென்னை- 43

உங்கள் பெண் மனதுக்குப் பிடித்த கல்வியைப் பயில்வாள். தொழில்நுட்பத் துறை யில் படித்தால் நல்ல பலன்தரும். சீதள சம்பந்தமான உடம்பு, குளிர்ந்த பதார்த்தங் கள் சாப்பிடக் கூடாது. 22 வயதுக்கு மேல் திருமணம் கைகூடும். நாகதோஷம் உள்ள வரனாகப் பார்க்கவும்.

# பரத்வாஜ் பதில்கள்

நேரிடும். ராகு / கேது வழிபட்டு வருதல் நலம் தரும்.

### தனுசு:

கல்வி வளம் மேலோங்கும். உத்தி யோகத்தில் நல்ல பெயர் ஏற்படும். புதிய வீடு வாங்கலாம். வழக்கு வெற்றி அளிக் கும். தொழில்துறையில் இடமாற்றம் ரெடி. புதிய வேலை கிடைக்கும். புதிய தொழில் துவங்க ஏற்ற நேரம். உடல் ஆரோக்கியம் பாதிக்காது. செலவுகள் சுபமானதாக இருக்கும். நண்பர், உறவினர் மூலம் அனு கூலம் ஏற்படும். குழந்தைகளால் சந் தோஷம் ஏற்படும். வழக்கு வெற்றி பெறும். சனி / ராகு / கேது வழிபட்டு வருதல் நலம்தரும்.

### மகரம்:

உடல் நிலை பாதிக்காது. கணவன் - மனைவி உறவு நற்பலனைத் தரும். குழந்தை பாக்கியம் கிட்டும். புதிய வீடு, வாகனம் வாங்க நல்ல காலம். கொடுக்கல் வாங்கலில் சிக்கல் தீரும். மனக் குழப்பம் இராது. தெய்வ பலம் கிட்டும். சிலருக்கு வேலை விஷயமாக தூர தேசம் செல்ல நேரிடும். சத்ரு தொல்லை விலகும். வேலை இல்லாதவர்களுக்கு வேலை கிடைக்கும். சனி / குரு வழிபாடு நற்பலனைத் தரும்.

### கும்பம்:

ஆரோக்கியத்தில் கவனம் தேவை. வேலைப் பளு அதிகமாகும். தன விருத்தி ஏற்படும். நெருங்கிய கூட்டாளிகளுடன் மனக்கசப்பு ஏற்படும். கணவன் - மனைவி அனுசரணையாக நடந்து கொள்வது நல்லது. யாருக்கும் ஜாமீன் போடுவதோ, கடன் கொடுக் கவோ கூடாது. எதிலும் நிதானமாகப் பேசுவது நல்லது. வெளிநாடு செல்லக் கூடிய யோகம் உள்ளது. பணகஷ்டம் வராது. திருமணம் கைகூடும். செலவுகள் சுபமானதாக இருக்கும். வீடு வாங்க நல்ல தருணம். ராகு / கேது வழிபட்டு வருதல் நற்பலனை அளிக்கும்.

### மீனம்:

எதிலும் யோசித்து செயல்படுங்கள். கணவன் - மனைவி விட்டுக் கொடுத்துப் போவது நல்லது. மாணவ / மாணவியர் கள் படிப்பில் கவனம் தேவை. வேலைப் பளு அதிகரிக்கும். திடீர் இடமாற்றம் ஏற்படும். உடன்பிறந்தவர்களால் அனு கூலம் ஏற்படும். ஆரோக்கியத்தில் கவனம் தேவை. கொடுக்கல் - வாங்கல் சுமாராக இருக்கும். தாயின் உடல் நிலை சற்று பாதிக்கும். வியாபாரத்தில் சற்று மந்த நிலை தொடரும். சனி / குரு / ராகு / கேது வழிபட்டு வருதல் நலம்.

'தியாகராஜ பாகவதரை வைத்துப் படம் தயாரிப்பதற்காகவே மதுரையைச் சார்ந்த ராயல் டாக்கீஸ் என்ற நிறுவனத்தைச் சில செல்வந்தர்கள் தொடங்கினார்கள். அந்தப் படம் 1937-ல் வெளிவந்த 'சிந்தாமணி' என்ற தியாகராஜ பாகவதரின் வெற்றிப் படம். இப்பட வெற்றியால் 'ராயல் டாக்கீஸ்' 'சிந்தாமணி' தியேட்டராக பெயர் மாறி இன்றும் மதுரையில் இயங்கி வருகிறது.

- வாமனன்
- திரை இசை அலைகள்



# "அப்படியே

கு.ஞானசம்பந்தன்

என் அப்பாவிடம் மாட்டிக் கொண்ட சினிமாமணியின் கதி அதோகதிதான் என்று நாங்கள் பயந்து நின்ற போது.

'சார், உங்கக் கோபம் எனக்குப் புரியுது. நானே உங்களைப் பார்த்துப் பல நாளாப் பேசணும், பேசணும்னு நினைச்சுக்கிட்டே வருவேன். ஏதோ ஒரு பயத்திலே தூர நின்னே உங்களை வணங்கிட்டுப் போயிருவேன். உங்க முகத்தைப் பார்க்கிறபோதெல்லாம் 'ஸ்வர்க்கசீமா' படத்தில வர்ற கதாநாயகன் சித்தூர் நாகையா ஞாபகந்தான் வரும். அவரும் உங்களை மாதிரித்தான் கம்பீரமா, கண்டிப்பா இருப்பாரு' என்று ஒரு போடு போட்டான்.

அதைக் கேட்டு ஆச்சரியப்பட்ட என் தந்தை, 'அட, நீ ஸ்வர்க்கசீமா படமெல்லாம் பாத்திருக்கியா?' என்றார்.

'என்ன சார், அந்தப் படத்தைப் பாக்காம இருப்பேனா? அந்தப் படம்தானே நம்ப பானுமதியம்மாவுக்குப் புகழை வாங்கிக் கொடுத்தது. அதிலேயும் 'பாவுரமா' என்று பாடிக் கொண்டு பானுமதி ஆடும்போது தியேட்டரே கைதட்டி ஆடுமே! அந்தப் பட இயக்குநர் பி.என். ரெட்டி காரு தானே பானுமதிக்கே சினிமா சான்ஸ் வாங்கிக் கொடுத்தவர்'... இப்படி சினிமாமணி பேசிக் கொண்டே போக, என் தந்தையாரும் ஆர்வமாகக் கேட்கத் தொடங்கினார்.

இப்போது உங்களுக்கு சினிமாமணியின் திரை ஞானம் புரிந்திருக்கும். இது மட்டுமில்லை. அக்ரஹாரத்து வீட்டுப் பெண்களுக்கு அவன் கதை சொல்லும் போது, கேட்க வேண்டுமே!

'அசோக்குமார் படத்திலே நம்ம தியாகராஜ பாகவதர் ஒரு தப்பும் செய்யாதப்ப அவர் கண்ணைப் பறிச்சுடறார் மகாராஜா. பார்வை இல்லாத பாகவதரைப் பார்த்து தியேட்டரே கலங்கி அழுவுது. ஆனா அப்பவும் அவர் பாடுறாரே ஒரு பாட்டு 'ஸத்வகுணபோதன்.' இப்பக் கேட்டாலும் நீங்க எல்லாரும் கட்டாயம் அழுவீங்க' என்று அவன் சொல்லி முடித்ததும் அத்தனை பெண்களும் 'ஸ்விட்ச்' போட்ட மாதிரி அழுவார்கள். இப்போது மெகா சீரியல் பார்த்து அழும் பெண்கள் எல்லாம் என்ன அழுகிறார்கள்? அந்த அழுகைக்கு வருமா?

அங்கேயே ஏதாவது சாப்பிட்டு விட்டு எங்களையும் கூட்டிக் கொண்டு வெளியே வரும் மணியை நாங்கள் பெருமையாகப் பார்த்துக் கொண்டு வருவோம்.

'அந்த அசோக்குமார் படத்திலே தியாகராஜபாகவதரைச் சிறையில் அடைக்கிற சிப்பாயா ஒரு சீன்ல மட்டும் உள்ளது யார் தெரியுமா?' எங்களைப் பார்த்துக் கேட்டான் மணி.

சினிமாவுக்குப் போகலாம் வாங்க! 5

# இரு, அசையாதே!”

எனக்கும் என்னைச் சுற்றி நின்ற என் நண்பர்களுக்கும் பாடத்தில் சந்தேகம் கேட்டாலே பதில் தெரியாது. இந்த மாதிரி பொது அறிவுக் கேள்விக்கு விடை யாருக்குத் தெரியும்? 'ஆத்தக் கண்டது யாரு? அழகரைச் சேவிச்சது யாரு?'னு நாங்கள் விழிக்க,

'அந்தச் சிப்பாயா வந்தவருதான்டா இன்னிக்கு மக்கள் திலகமா கத்திச் சண்டை போடுற நம்ம எம்.ஜி.ஆர்' என்றான் மணி.

அவனது பேச்சில் கேட்போரை ஈர்க்கும் சுவாரஸ்யமான செய்திகள் இருக்கும். எதிரே இருப்பவர்களின் வயது, தகுதி, அறிவு இவற்றுக்கு ஏற்றபடி அவனது உரையாடல் அமையும் பாங்கே தனி. அதிலும் சினிமாக் கதாநாயகர்களையும், நாயகிகளையும் பற்றிச் சொல்லும் போது, 'நம்ம எம்.ஜி.ஆர்.', 'நம்ம சிவாஜி', 'நம்ம சரோஜாதேவி' என்று 'நம்ம' சேர்த்தே சொல்லும் அந்நியோன்யம் நம்மையும் அவர்களோடு சேர்த்துக் கொள்வது போன்று மகிழ்ச்சியாயிருக்கும்.

தீபாவளி, தைப் பொங்கல், தமிழ் வருடப் பிறப்பு இப்படிப்பட்ட முக்கியமான பண்டிகை நாட்களில் எங்கள் ஊருக்கு அருகில் இருக்கும் மதுரையில் புதிய படங்கள் ரிலீஸாகும். சில மாதங்கள் ஓடியும், ஓடாமலும் பிறகு எங்களுருக்கு வரும்.

'தீபாவளிக்கு சினிமா பாக்காதவன், அதிலும் புதுப் படம் பாக்காதவன் மனுஷனா? அவன் பூமிக்குப் பாரமா இருக்கக் கூடாது' என்று முடிவெடுக்கும் தீவிரவாத நண்பர்கள் சங்கத்தில் சினிமாமணியின் சிபாரிசின் பேரில் என்னையும் சேர்த்துக் கொண்டார்கள்.

“அம்மா, நான் தீபாவளியன்னைக்கு சினிமாவுக்குப் போகட்டுமா?” அம்மா மாவுரலில் தோசைக்கு மாவு அரைக்கும் போது அருகில் முக்காலி போட்டு உட்கார்ந்து ஆட்டுரலின் குழவியை நான் சுற்றி அரைக்க, அம்மா மாவைத் தள்ளியபடி இருந்த போது நான் கேட்டேன்.

நான் திரும்பவும் பேச்சை ஆரம்பிக்கு முன், “நீ தனியாவா போறே?” என்று கேட்க,

“இல்லையில்லை, சினிமா மணி வர்றான். அப்பா ஒன்னும் சொல்ல மாட்டார். அப்படித்தான அம்மா?” நான் பயத்தோடு கேட்டேன்.

“உன்னை அனுப்பினா என்னைத் திட்டுவாரு. நீ வந்த பிறகு உன்னைத் திட்டலாம்... அடிக்கலாம்! அது அவர் விருப்பம்” என்று நேயர் விருப்பம் போல அம்மா சொன்னார்கள்.

“உனக்கு சினிமாவுக்குப் போகக் காசு ஏது?”

“நீதான் தரணும்... நான் படிச்சுப் பெரியாளாகி முதல் சம்பளம் வாங்கி உன் கையிலதானே கொடுப்பேன்” நான் குழவியை வேகவேகமாகச் சுற்றத் தொடங்கினேன்.



தீபாவளியன்று புது டிரவுசர், புதுச் சட்டை, புது வெடி எல்லாம் எடுத்துப் போட்டுக் கொண்டேன். சட்டைப் பையில் இனிப்பு அதிரசமும், கொஞ்சம் முறுக்கும் ரெடி! நானும் ரெடி!

சினிமா மணி, பால்கார கோபாலு, செவத்த காளை, கிழத்தெரு மாசானம் எல்லோரும் சந்தோஷமாகக் கிளம்பினோம்.

"உன் பையில என்ன இருக்கு?" நான் கோபாலுவிடம் கேட்டேன்.

"இட்லி" என்றான்.

"போடா, இதையா கொண்டு வருவாங்க?" என்றேன் நான்.

"எங்க வீட்டுத் தீபாவளிப் பலகாரம் இதுதான்டா" என்றான் அவன்.

மகிழ்ச்சியோடு தியேட்டருக்குப் போன நாங்கள் திகைத்து நின்று விட்டோம்.

அப்படி ஒரு கூட்டத்தை அந்த ஊரில் அந்த தியேட்டரில் நான் பார்த்ததில்லை.

தியேட்டரின் முன் வாசலில் அலங்கார வளைவுகளில் எம்.ஜி.ஆர். வீரமாகக் கத்தியை நீட்டியபடி கட்-அவுட்டில் நின்று கொண்டிருந்தார்.

"மணி, இதென்ன இவ்வளவு கூட்டமா இருக்கே... ஆயிரம் பேருக்கு மேலே இருப்பாங்க போல இருக்கே. நாம நாளைக்கு வருவமா? படம் பேரு என்ன?"

'ஆயிரத்தில் ஒருவன்' சொல்லிக் கொண்டே மணி எங்களையும் இழுத்துக் கொண்டு கூட்டத்தில் நுழைந்து டிக்கெட் கவுண்டர் அருகில் வந்தான்.

அவ்வளவுதான் எனக்குத் தெரியும். திடீரென்று அத்தனை பேரும் அந்த எலிப் பொந்து கவுண்ட்டரை நோக்கிப் பாய்ந்தார்கள்.

நின்று கொண்டிருந்தவர்களின் தலையில் ஏறி நாலு பேர் மிதித்துக் கொண்டு ஓடினார்கள்.

ஒருவன் எம்.ஜி.ஆரின் கத்தியைப் பிடித்துக் கொண்டு தியேட்டரின் உள்ளே ஏறிக் குதித்தான்.

மணி சட்டென்று யோசித்துத் தன் பையில் இருந்த எதையோ பற்றவைத்துக் கூட்டத்தில் போட, அது 'டமாரென்று' வெடிக்க, கூட்டம் சிதறி ஓடியது.

எங்களை இழுத்துக் கொண்டு மணி தியேட்டருக்குள் ஓட, என் புதுச் சட்டை ஒரு ஆணியில் மாட்டி இழுபட, கோபாலு டிரவுசர் பையிலிருந்த இட்லியை யாரோ ஒருவன் கட்டு விட... எப்படி உள்ளே நுழைந்தோம் என்றே தெரியவில்லை.

தியேட்டருக்குள் எங்களைப் போலவே நுழைந்த எண்ணூறு பேர் முதலிலேயே உட்கார்ந்திருந்தார்கள்.

'பத்மினி பிக்சர்ஸ்' என்று எழுத்துப் போடத் தொடங்கி 'மக்கள் திலகம்... எம்.ஜி.ஆர்.' என்ற பெயர் வந்ததும் எல்லோரும் மகிழ்ச்சியில் எழுந்து நின்று சத்தம் போட்டுக் கையிலிருந்த காகிதங்களைத் திரையை நோக்கி வீசினார்கள்.

என் கையில் ஒன்றும் இல்லாததால் கூட்டத்தில் நொறுங்கிப் போன முறுக்குகளை எடுத்து நான் எறிய சிலர் அதை கேட்ச் பிடித்துத் தின்றார்கள்.

படம் போட்டுக் கொஞ்ச நேரத்தில் கதாநாயகி அறிமுகமாகப் போகும் சமயம் தியேட்டரில் 'கரண்ட் கட்' ஆக எங்கும் இருட்டு. ஒரே சத்தம்.... விசில்... அடிதடி, சிலர் வெளியே இருந்து மணலை வாரி எல்லோர் மீதும் வீச... கலவரம்...

'அப்படியே இரு அசையாதே...' என்று சத்தம் கேட்டது.

(ரீல் சுற்றும்)

படம் : **புதூர் சரவணன்**

"நீ என்கிட்டே வாங்கின கடனைத் திருப்பிக் கொடுக்க மாட்டேங்கிறே. நான் இன்னொருத்தர்கிட்டே வாங்கிட்டு எவ்வளவு சிரமப்படுறேன், பாரு...!"

"இப்பவாவது என்னோட கஷ்டத்தை நீ புரிஞ்சுக்கிட்டியா...?"

- ரத்னபாரதி





**உத்திரவாதமான மேனிப் பராமரிப்பு**
**தலைமுறை தலைமுறையாக**

50 ஆண்டுகளுக்கும் மேலாக, மேனிப் பராமரிப்பில் ஸிந்த்தால் நம்பகமான சோப் என்று தொன்றுதொட்டு பெயர் பெற்றுள்ளது. ஸிந்த்தால் சோப் மேனியின் எழிலை மேம்படுத்துகிறது. இதன் ஒப்பற்ற நறுமணம் நாள் முழுவதும் நீடித்து உங்களை புத்துணர்வுடன் வைக்கும். எனவே ஸிந்த்தால் பல தலைமுறைகளாக விசுவாசமான வாடிக்கையாளர்களை உருவாக்கியதில் ஆச்சரியமில்லை.




**மேனிப் பராமரிப்பு என்றென்றும்**

கடியாரத்தில் மணி இரண்டடித்தது. புரண்டு, புரண்டு படுத்துக் கொண்டிருந்த எனக்குத் தூக்கம் வரவில்லை. தினம் இப்படித்தான் ஆகிவிடுகிறது. சில சமயம் விடிய விடிய விழித்துக் கொண்டிருந்துவிட்டு காலையில் அப்படியே எழுந்து ஆபீஸ் கிளம்பிய நாட்களும் உண்டு.

எல்லாவற்றுக்கும் காரணம் இந்தத் தலையணைதான். இரண்டு, மூன்று தலையணைகள் இருந்தும் ஒன்று கூட உருப்படியில்லை. ஒன்று 'தொளதொள'என்று துவண்டு போய் இருந்தது. இன்னொன்று பாறாங்கல் மாதிரி இறுகிக் கிடந்தது. அதையெல்லாம் பயன்படுத்தி, கழுத்து வலி வந்ததுதான் மிச்சம்!

இரவு முழுவதும் தூக்கம் இல்லாது போனால், காலையில் எழுந்திருக்கும் போதே 'முணு முணு' என்று தலைவலி ஆரம்பித்துவிடும். பார்ப்பவர்களிடம் எல்லாம் எரிந்து விழுந்து மூட் அவுட் ஆனதோடு, ஆபீஸ் கணக்கில் தவறு ஏற்பட்டு, மேலதிகாரியிடம் வாங்கிக் கட்டிக் கொண்டதும் உண்டு.

அன்று ஆபீஸ் விட்டு வரும் வழியில் அந்த ஃபர்னிச்சர் மார்ட், கண்ணில் பட்டது. வாசல் போர்டில் விதவிதமான கட்டில் டிசைனும் ஃபோம் தலையணை விளம்பரமுமாக நியான் விளக்கில் பளபளத்தது.

என்னையுமறியாமல் கால்கள் கடைக்குள்ளே போனது. கடைக்காரர் என்னை ஒரே அமுக்காக அமுக்கி உள்ளே கூட்டிக் கொண்டு போய், சேல்ஸ் பெண் ஒருத்தியிடம் ஒப்படைத்து விட்டுத் தான்,



சாருமதி பாஸ்கரன்

கேஷ் கவுண்ட்டருக்குத் திரும்பினார்.

அந்தப் பெண்ணோ என்னை சாமானியமாக விடுவதாயில்லை. என்ன ஏதென்று என்னைத் துருவித் துருவிக் கேட்டு, ஒரு வழியாக என் தூக்கமே அந்தக் கடை ஃபோம் தலையணையில் தான் இருப்பதாக சத்தியமே செய்தாள்.

"எதுக்காக சார் சம்பாதிக்கிறோம்? நிம்மதியா சாப்பிடாம, தூங்காம இருக்கவா?" என்று கேள்வி வேறு கேட்டாள்.

அவள் காட்டிய ஃபோம் தலையணைகள் ரகவாரியாக நூறிலிருந்து முந்நூறு வரை இருந்தது. அதிலும் அந்த முந்நூறு ரூபாய் தலையணையைத் தொட்டதுமே இலேசாகக் கண்களைத் தூக்கம் சுழற்றியது போல இருந்தது. மனபிரமை!

இருந்தும், என் நிதி நிலைமை காரணமாக உடனே வாங்கி விடாமல் மறுநாள் வருவதாகச் சொல்லி அவளிடமிருந்து தப்பித்துக் கொண்டு வந்து விட்டேன்.



அந்த மாத சம்பளத்தை ஆபிஸில் கொடுத்தபோது, எனக்கு போன் வந்திருப்பதாக ப்யூன் வந்து சொன்னான்.

ஊரிலிருந்து என் தங்கைதான் பேசினாள். "காலேஜ் ஃபீஸ் கட்டணும், மறந்துடாதே அண்ணா. எப்போதும் அனுப்பும் பணத்தோடு ஒரு அறுநூறு சேர்த்து அனுப்பினால் போதும். மீதியை அம்மாவும் நானும் வீட்டுச் செலவில் அட்ஜஸ்ட் செய்து கொள்கிறோம்" என்று சமாதானம் சொன்னாள்.

போச்சு, இன்னும் ஒரு மாதத்துக்கு தூக்கத்தைத் தொலைத்து விட்டு இருக்க வேண்டியதுதான். சே! முந்நூறு ரூபாய்க்கு வாங்க நினைத்தால் அறுநூறுக்குச் செலவு வருகிறது. என்னுடைய வேறெந்த அத்யாவசிய தேவைகளையும் குறைக்க முடியாது. என் ரூம் வாடகை, மெஸ் பில் இத்யாதிகளுக்கே மீதியும் சரியாகப் போய்விடும். சரி, அடுத்த மாசம் வாங்கிக்க வேண்டியதுதான் என்று மனசைத் தேற்றிக் கொண்டேன்.

மூப்பது நாள் ஓடியதே தெரிய வில்லை. சம்பள கவரைப் பிரித்ததுமே அந்த 'மெத்து மெத்து' தலையணைதான் நினைவுக்கு வந்தது.

மூக்குக் கண்ணாடி மாற்ற வேண்டு மென கேட்டு எழுதிய அப்பா, ராமேஸ் வரம் போக ஆசைப்பட்ட அம்மா எல் லோரையும் மனத்திலிருந்து தூக்கி ஒரு மூலையில் வைத்தேன்.

நேராக அந்த பர்னிச்சர் கடைக்குப் போய் முந்நூறு ரூபாய் தலையணையை வாங்கினேன்.

பில் போடச் சொன்னபோது, அந்தப் பெண், "சார், தலையணை உறை வாங்க லையா?" என்று கேட்டாள்.

"அதெல்லாம் வேணாங்க, வீட்டில் இருக்கற உறையையே போட்டுக்கிறேன்" என்று மறுத்தேன்.

"என்ன சார், யானையை வாங்கிட்டு சங்கிலி வாங்க யோசிச்சா எப்படி? இதோ பாருங்க வெல்வெட் உறை. எவ்வளவு மிருதுவா அழகா இருக்கு. ஐம்பது ரூபாய் தான் சார். இதுக்கும் சேர்த்து பில் போட்டுடறேனே?" என்றாள் விடாமல்.

கடை முதலாளி வேறு பக்கத்தில் வந்து நின்று கொண்டு என் முகத்தையே பார்க்கவே, சுய கௌரவத்தை விட்டுக் கொடுக்காமல்,

"சரி," என்று தலையாட்டினேன்.

அழகாக பார்சல் செய்து, ஒரு பெரிய கைப்பிடி வைத்த கவரில் போட்டு, கூடவே அன்பளிப்பாக ஒரு ஹேப்பி மேன் கீ செயினையும் அதில் வைத்தி ருப்பதாகச் சொன்னவள், "ஹேப்பி மேன் இருந்தால் வீட்டுக்கு ரொம்ப நல்லது" என்று சொல்லிக் கொடுத்தாள்.

வீட்டுக்குள் நுழையும்போது, பக்கத்து வீட்டுப் பையன் கையில் புத்தகத்துடன் டியூஷனுக்குக் கிளம்பிக் கொண்டிருந் தான்.

அவனைப் பார்த்த உடனேயே மனதுக்குள் சின்ன அதிர்ச்சி அலை ஒன்று வந்து போனது. ப்ளஸ் ஒன் படிக் கும் தம்பி, இந்த மாதம் கோச்சிங் கிளாஸில் சேர வேண்டுமெனச் சொன் னது நினைவுக்கு வந்தது.

"ப்ச்.." என்று அலட்சியப்படுத்திவிட்டு உள்ளே நுழைந்தேன்.

அப்பாடா, இத்தனை நாள் தூக்கத் தையும் சேர்த்து வைத்து இன்னிக்குத் தூங்கிட வேண்டியதுதான். வேற எதுக் குத்தான் சம்பாதிக்கிறோம்? பார்சலைப் பிரித்து தலையணையில் உறையையும் போட்டு, மெத்தையில் போட்டபோது, அந்த அறைக்கே தனி அழகு வந்திருந்தது.

கைலிக்கு மாறி, படுத்தபோது, உண்மை யிலேயே அப்படியே தலையணை உள்ளே வாங்கிக் கொண்டது.

"மிருதுவா... அழகா..." சேல்ஸ் பெண் சொன்னது நினைவுக்கு வந்தது.

கண்களை மூடித் தூங்க முயற்சித் தேன். உடைந்து போன மூக்குக் கண் ணாடி ஃப்ரேமுடன் அப்பா கண்ணுக்குள் வந்தார். கூடவே ராமேஸ்வரம் போக ஆசைப்பட்ட அம்மா, கோச்சிங் கிளாஸில் சேர விரும்பிய தம்பி, மனத்தில் நிழலாடி னார்கள்.

தூக்கம் தொலைந்து போனது. ○

"வாங்க உட்காருங்க; உங்க பேரு என்னன்னு சொல்லுங்க!"

"ஏதாவது ஒரு க்ளூ கொடுங்க டாக்டர்!"

- யமுனா ரெங்கநாதன்





# சிறுநீரகக் கோளாறு, சிறுநீரகக் கல், சிறுநீர்குழாய் கல், சிறுநீர் பை கல் - கரையவும் உருவாகாமல் இருக்கவும் உதவும் தெய்வீக மூலிகைகள்

**பத்தியம் கிடையாது. பக்க விளைவு கிடையாது**

நோயற்ற வாழ்விற்கு சுற்றுபுறம் மட்டுமல்ல உடலின் உள்ளேயும் சுத்தம் செய்யப்பட வேண்டும். அப்படிப்பட்ட சுத்திகரிப்பு பணியை செய்யும் ஒரு இரசாயண தொழிற்சாலை தான் சிறுநீரகம் (கிட்னி) எனப்படும் உறுப்பு.

**சிறுநீரகத்தின் சிறப்பான பணிகள் :** நம் உடலின் நீரின் அளவு, இரத்தத்தில் உப்பு, அமிலம் மற்றும் காரத்தன்மையை சீராக வைத்திருக்க உதவுகிறது. இரத்த அழுத்தம், இரத்த சோகை வராமல் தடுக்கவும், வைட்டமின் டி உற்பத்திக்கும் சிறுநீரகம் துணை புரிகிறது. நம் இரத்தத்தில் உள்ள கழிவுப் பொருட்களான யூரியா, கிரியேட்டினின் அதிகப்படியான நீர், யூரிக் அமிலம், தேவைக்கு அதிகமான தாதுப் உப்புக்களான சோடியம், பொட்டாசியம், குளோரைடு போன்ற வெளியேற்றப்படுகின்றன. நாம் உண்ணும் உணவு செரித்தலின் கடைசி நிலையில் உண்டாகும் பாஸ்பேட், சல்பேட், ஆக்ஸலேட், யூரேட் போன்ற உப்புக்களை சிறுநீர் மூலம் நம் சிறு நீரகங்கள் வெளியேற்றுகின்றன. நமது சிறுநீரகம் நன்றாக செயல்படுகின்றனதா என்பதை அறிய ஒவ்வொருவரும் இரத்தம் மற்றும் சிறுநீரகப் பரிசோதனை செய்துக் கொள்வது நல்லது.

**சிறுநீரகக்கல் உருவாகக் காரணம் :** சிறுநீரகங்கள் நன்றாக வேலை செய்யும்போது இரத்தத்தில் உள்ள எல்லா கழிவுகளும் சரியான அளவில் வெளியேற்றப்படு கின்றன. சிறுநீரகம் பழுதடையும்போது இரத்தத்தில் உள்ள கால்சியம், பாஸ்பேட் யூரிக் அமிலம், ஆக்ஸலேட் சிஸ்டைன், கால்சியம் மானோ ஹைட்ரேட் போன்ற மிக நுண்ணிய உப்பு படிகங்கள் (Crystal Urea) மணல் போன்று உருவாகும். இப்படிகங் கள்மீது மேலும், மேலும் படிகங்கள் சேரும்போது கற்கல் உண்டாகின்றன.

இந்த கற்கல் சிறுநீரகத்தில் இருந்தால் வலது அல்லது இடது பக்க கீழ் முதுகு பக்கங்களில் வலி வரலாம். சிறுநீர் குழாயில் கல் இருந்தால் வலி விதைகள் வரை பரவலாம். சிறுநீர் தாரையில் இருந்தால் வாந்தி, நீர்கடுப்பு, சிறுநீரில் இரத்தம் கலந்து செல்லுதல், காய்ச்சல் ஆகிய விளைவுகள் ஏற்படலாம். சிறுநீரின் வேகம் தடைபடலாம். சிலருக்கு அறிகுறிகள் இன்றியும் இருக்கலாம். அடிக்கடி சிறுநீர் பாதை தொற்று (Urinary Tract Infection) சிறுநீர்பாதை அடைப்பு போன்றவற்றாலும் கற்கல் தோன்றலாம்.

**ஒவ்வொரு மாதமும்**

| தேதி | ஊர் |
|---|---|
| 2 | வேலூர் |
| 2 | காஞ்சிபுரம் |
| 4 | கடலூர் |
| 4 | விழுப்புரம் |
| 4 | திருவண்ணாமலை |
| 7,8 | மும்பை |
| 9 | பெங்களூர் |
| 12 | சேலம் |
| 12 | ஈரோடு |
| 12 | திருப்பூர் |
| 13 | கோவை |
| 13 | உடுமலைபேட்டை |
| 14 | மதுரை |
| 14 | திருநெல்வேலி |
| 15 | விருதுநகர் |
| 16 | திருச்சி |
| 16 | கரூர் |
| 20,21 | புது டெல்லி |

தெய்வீக மூலிகை மருந்தை பெற : ஆஸ்த்துமா, சளி, இருமல், தும்மல், அல்சர், சர்க்கரை வியாதி, மூட்டு வலி, இதய நோய், புற்றநோய், சிறுநீரகக் கோளாறு, தைராய்டு, காமாலை, மலச்சிக்கல், வெள்ளைப்படுதல், இரத்த அழுத்தம், ஆண்மைக்குறைவு, சர்மநோய், வலிப்பு, பல்பொடி, குளியல் பொடி, பேஸ் பவுடர் தலைமுடி உதிராதிருக்க, கண்பார்வை நன்றாக தெரிய போன்ற எல்லா நோய்களும் குணமாகவும், வராமல் தடுக்கவும். வேப்பிலை, வில்வம், துளசி, அருகம்புல், அத்தி மாவிலை, நெல்லிக்காய், கடுக்காய், தான்றிக்காய், தும்பை, குப்பைமேனி, பூவரசன், பொன்னாங்கன்னி, கரிசலாங்கன்னி, அசோகா, அரசன், ஆலம், வல்லாரை, தூதுவளை, கண்டங்கத்திரி, சுக்கு, மிளகு, திப்பிலி, அமுக்கரா, ஆவாரம்பூ போன்ற தெய்வீக மூலிகைகளால் தயார் செய்யப்பட்ட மூலிகை மருந்துகள் கிடைக்கும். இதனை எல்லோரும் வாங்கி பயன் பெறலாம். ஒரு மாத தேவைக்கு ரூ.200/- M.O. (or) Draft அனுப்பி Regd. Post-ல் பெறலாம்.

**Dr. M.குருபரன் & Dr. M.சபாபதி S/o Dr. M.மாணிக்கவாசகம்**

## CKM தெய்வீக மூலிகை மையம்

தலைமை முகவரி : PB No.30, 1. திருநாத முதலி நகர் (காலேஜ் எதிரில்), திருப்பத்தூர், வேலூர்-635 601
✆ 04179-222769 செல் : 94441 61670, 94444 07638

சென்னை கிளை : 115, புரசைவாக்கம் நெடுஞ்சாலை, (பிரின்ஸ் மேனர் பக்கத்தில்) கெல்லீஸ், சென்னை - 600 010.
✆ 044-26424285, 26427638, செல் : 94440 01447

மேலே உள்ள முகவரிகளில் தினமும் ஆலோசனை நேரம்
காலை 10.00 முதல் 1.00 மணி வரை   மாலை 5.00 முதல் 7.00 மணி வரை

# தலைமுறைகள் - 4

எனக்கு அப்போது எட்டு வயது. மும்பையின் தானா பகுதியில் வசித்து வந்தோம். அப்பா முன்னணி நிறுவனம் ஒன்றில் பொறுப்பில் இருந்தார். உறவினர்கள், நண்பர்கள் என்று முக்கிய மாணவர்களுக்கு மட்டும்தான் ஜாதகம் பார்த்துச் சொல்வார். அப்பா பணிபுரியும் நிறுவனத்தின் அதிபருடைய அண்ணன் ஒரு நாள் வீட்டுக்கு வந்து, அப்பாவிடம் அவரது ஜாதகத்தைக் கொடுத்தார். அதைப் புரட்டிப் பார்த்த அப்பா, "இன்னும் மூன்று நாட்களுக்கு நீங்கள் எங்கேயும் வெளியூர்ப் பயணம் போகக் கூடாது'' என்று கெஞ்சிக் கேட்டுக் கொண்டார். அவரோ "நான் டெல்லிக்குப் போயே ஆகவேண்டும். இல்லையென்றால் பெரிய பிஸினஸ் வாய்ப்புப் போய்விடும்'' என்றார். அப்பாவோ "நான் ரயிலில் செல்வதற்கு டிக்கெட் வாங்கித் தருகிறேன். ஆகாய மார்க்கம் வேண்டவே வேண்டாம்" என்றார். அப்பா கேட்டுக் கொண்டதைப் பொருட்படுத்தாமல் அவர் விமானத்தில் புறப்பட்டிருக்கிறார். சாகர் விமான நிலையத்திலிருந்து



கிளம்பிய விமானம் சில நிமிடங்களில் வெடித்துச் சிதறி அதிலிருந்த எல்லோருமே இறந்து போனார்கள்.

எப்படி இவ்வளவு துல்லியமாக அப்பா சொன்னார் என்று ஆச்சரியமாக இருந்தது. ஜோதிடத்தை மனித நேயத்தின் மறுபதிப்பாக பார்க்கும்

# அங்கே தெரியுது நம்ம அருமை!

**- ஏ.எம்.ஆர்.கண்ணன்**

அப்பா, இன்று எத்தனையோ பேருக்கு ஆறுதலாக இருப்பதைப் பார்த்துவிட்டு, நாம் இந்தக் கலையில் ஏன் ஆர்வம் காட்டத் தவறினோம் என்று எண்ணுகிறேன். ஆனால் அப்பா சொல்வதைப் போல வானியல் பூர்வமான இந்த ஜோதிட அறிவியல் கலையில் ஆர்வம் ஏற்பட வேண்டும் என்றால், பல பிறவிகளில் புண்ணியம் செய்திருக்க வேண்டும். ஜாதகப்படி அதற்கான சூழ்நிலைகள் கூடி வரவேண்டும். சூட்சமங்களை அறிந்த ஞானிகள் எங்கெல்லாம் இருக்கிறார்களோ அங்கெல்லாம் சென்று தேடித்தேடி அதைக் கற்றுக் கொள்ளவும் வேண்டும். இன்றும் அப்பாவிடம் அந்தத் தேடல் இருக்கிறது. 'ஜோதிடம் ஆழ்ந்த கடல். அதில் எந்த அளவு ஆழமாக மூழ்குகிறோமோ, அந்த அளவு உயர்ந்த முத்துக்கள் கிடைக்கும்' என்பது அப்பாவின் அனுபவம்.



• குடும்பத்துடன்...

அப்பாவைப் போல தீராத தேடுதல் எனக்கு உண்டு. ஆனால் அது ஜோதிடக் கலையில் அல்ல. முதலில் எம்.ஏ.பொலிட்டிகல் சயின்ஸ் படித்தேன். எனினும் போட்டோகிராஃபி மீது தீராத தேடல், பத்திரிகையுலகம் மீது ஒரு காதல். அடுத்து எம்.ஏ.ஜர்னலிஸம் படித்தேன். உடனே 'ஆந்திர பிரபா'வில் வேலை. பிறகு 'இந்தியன் எக்ஸ்பிரஸ்' பத்திரிகையில் இரண்டரை ஆண்டுகள் போட்டோ ஜர்னலிஸ்ட்டாக பல துணிச்சலான அசைன்மெண்டுகளைச் செய்தேன். வாசகர்களின் பாராட்டுதல்கள் குவிந்தன. இந்த நேரத்தில் 'வெளிகலா' என்ற சர்வதேச செய்தி நிறுவனத்தை வளைகுடாவில் தொடங்கினார்கள். மால்கம் வாட் என்ற பிரிட்டிஷ் எடிட்டர் தான் இதற்குத் தலைவர். இந்தியாவிலிருந்து நாற்பது பத்திரிகையாளர்களைத் தேர்வு செய்தார். அதில் தேர்வு பெற்று கல்ப் சென்றேன். அங்கே இரண்டரை ஆண்டுகள் பணி. அமெரிக்கத் தூதரகத்தின் தலைமைப் பொறுப்பில் இருந்த எலிசபெத் பிராங்வெல் என்ற பெண்மணி என் போட்டோகிராஃபியை ரசிப்பார். என்னைப் பார்க்கிற போதெல்லாம் 'நீ அமெரிக்கா சென்று போட்டோகிராஃபி படி. உனது திறமைக்கு வளைகுடா ஒரு சின்ன எல்லை" என்பார். அமெரிக்கா கிளம்பினேன். அப்ஸ்டேட் நியூயார்க்கின் கௌரவம் என்று கருதப்படும் சிரக்யூஸ் பல்கலைக் கழகத்தில் போட்டோகிராஃபி, மல்டிமீடியா படிப்புகள் உள்ளடங்கிய இரண்டாண்டு பட்டமேற்படிப்பை முடித்தேன். கையோடு அங்கேயே வேலை கிடைத்தது. ஆசிரியப்பணி. கற்றுத்

தேர்ந்த மல்டி மீடியா கல்வியை கடச் கடச் சொல்லிக் கொடுத்த அனுபவம், ஆசிரியர் பணி மீது ஓர் ஆர்வத்தை உண்டாக்கியது.

இந்த நேரத்தில் அமெரிக்கப் பள்ளிகளில் ஒரு பிரச்னை. 2003-வது கல்வி ஆண்டில் பன்னிரண்டாம் வகுப்பில் பயின்று வந்த மாணவர்களில் ஒருவர் கூட, அறிவியல் மற்றும் கணிதப் பாடத்தில் 'ஏ கிரேடு' பெறவில்லை. அந்த அளவுக்கு இந்த இரு பாடங்களின் மீதும் அவர்களுக்கு வெறுப்பும், பிடிப்பின்மையும் வந்துவிட்டன. தலையைப் பிய்த்துக் கொண்ட அமெரிக்க அரசாங்கம், இந்தப் பாடங்களை ஆர்வமுடன் கற்கும் மனப்பாங்கை மாணவர்களிடம் எப்படி வளர்ப்பது என்ற ஆராய்ச்சியில் தீவிரமாக இறங்கிவிட்டது. சிறுவயது முதலே அறிவியல் மற்றும் கணிதப் பாடங்களில் எனக்கு ஆர்வமுண்டு. இது தொடர்பான ஆராய்ச்சிப் படிப்பை ஏன் கற்கக் கூடாது என்ற உந்துதல் காரணமாக, அதே பல்கலைக் கழகத்தின் சயின்ஸ் பிரிவில் பி.எச்.டி. பயின்று வருகிறேன். விளையாட்டுக்கள் மூலம் கணிதம் மற்றும் அறிவியலைக் குழந்தைகளுக்கு எப்படிக் கற்றுக் கொடுப்பது என்பதுதான் ஆராய்ச்சியின் சாராம்சம்.

இதற்கு அரசாங்கத்தை நம்பிக் கொண்டிருந்தால் போதாது. படித்தவர்கள் எல்லோரும் முன் வரவேண்டும். குறைந்தது இரண்டு ஆண்டுகளாவது தன்னார்வ ஆசிரியராகப் பணிபுரிந்து நமது சமுதாயத்தைக் கல்வியில் சமநிலைச் சமுதாயமாக உருவாக்க பட்டதாரிகள் பாடுபட முன்வர வேண்டும். இது என்னுடைய தாகங்களில் ஒன்று. இதற்கு நானே முன்னுதாரணமாக இருக்க விரும்புகிறேன்.

ஆராய்ச்சிப் படிப்பை முடித்து மூன்றாண்டுகள் அங்கே பணிபுரிந்த கையோடு சென்னை திரும்பி விடுவது என்று திட்டமிட்டிருக்கிறேன். இங்கே அயோத்தியா குப்பம், அனுமந்தாபுரம் போன்ற மீனவ மக்களின் குடியிருப்புகளைத் தேடிப் போய் அங்கே உள்ள குழந்தைகளுக்கும், மேல்நிலை பயிலும் மாணவர்களுக்கும் கணிதம், அறிவியலை கற்றுத்தரப் போகிறேன். இஸ்லாமிய மதராஸா பள்ளிகள், அரசுப் பள்ளிகள் என்று இந்தக் கல்விச் சேவையை கொஞ்சம் கொஞ்சமாக விரிவுபடுத்த வேண்டும். இதற்கென்று திருவல்லிக்கேணியில் இருபத்தெட்டு ஆண்டுகளாக ஆக்கப்பூர்வ கல்விப் பணிகளைச் செய்து வரும் ஸ்ரீநிவாஸ் இளைஞர் சங்கத்தின் மனித வளத்தைப் பயன்படுத்திக் கொள்வதென்று திட்டமிட்டிருக்கிறேன்.

வளைகுடா நாடுகள், அமெரிக்கா, ஐரோப்பா என சுற்றி வந்தபோதெல்லாம் உலகம் எத்தனை பெரியது என்று தோன்றியது. அதே நேரம் வெளியில் இருந்து பார்க்கிறபோதுதான் நமது நாடு எத்தனை உயர்ந்தது, சிறந்தது என்று ஒவ்வொருவரும் உணர முடியும்.

ஆன்மிகம் நமது இரத்தத்திலேயே இருக்கிறது. மத நல்லிணக்கம், சகோதரத்துவம், மனித நேயம் இவற்றை யாரும் நமக்கு கற்றுத் தர வேண்டிய அவசியமில்லை. இந்த அற்புதங்களோடு மனித வளம் எனும் அளப்பரிய பொக்கிஷம் நம்மிடம் இருக்கிறது. அதற்கு கல்வி ஊட்டினால் நாம் அமெரிக்காவை மிஞ்சிவிடலாம்.

படம்: புதூர் சரவணன்

''என்னங்க... 'இதயம் பலவீன மாணவர்கள் அடுத்த நிகழ்ச்சியைப் பார்க்க வேண்டாம்'னு டீவியில எழுத்து வருது...''

''செய்திகள் வர்ற நேரமாச்சே, அதான்!''

- நாமக்கல் பாலு



# சங்கீத சங்கதிகள்!

தியாகராஜரின் ரக்தி ராக கீர்த்தனைகளை மையப்படுத்தி பம்பாய் ஜெயஸ்ரீ பாடினார் ஹம்சத்வனி சபாவில். அன்று தியாக ராஜ ஆராதனை தினம். 'ஸ்ரீரகுகுல' (ஹம்சத்வனி), 'ஹெச்சரிக்ககா ரார' (யதுகுல காம்போதி) 'எந்த முத்தோ' (பிந்து மாலினி), விரிவான ஸ்ரீரஞ்சனி ஆலாபனையுடன் மிகச் சாவதானமாக 'ஸொகஸுகா ம்ருதங்க தாளமு; இடையில் சற்று மிடுக்காக 'மும்மூர்த்துலு' (அடாணா). ஜெயஸ்ரீயின் தித்திக்கும் குரலில், பக்தியும் ரக்தியும் சற்றுத் திகட்டுமளவுக்கே போயிற்று. என்ன நினைத்தாரோ, "ஸொகஸுகா'வை அப்படி நீட்டி, முழக்கி, இழுத்துப் பாடினார். அதனால் சுறுசுறுப்பாக இருக்க வேண்டிய இரண்டாம் கால கல்பனாஸ்வரங்கள் கூட முதல் காலம் போலவே தளர்ந்து பிடிப்பில்லாமல் ஒலித்தன.



'டிவைன் மதர் ஸொஸைட்டி' என்ற சமூகத் தொண்டு நிறுவனம் அவ்வப்போது பழைய இனிமையான இந்தித் திரைப்படப் பாடல்களை 'காதா ரஹே மேரா தில்' (என் உள்ளம் பாடுகிறதே!) என்ற தலைப்பில் சிறப்பாக இளம் பாடகர்களைக் கொண்டு வழங்குவது உண்டு. கடந்த 13-ம் தேதி, நிறைந்த காமராஜர் அரங்கத்தில் அவர்கள் வழங்கிய நிகழ்ச்சிக்குப் பெயர்: 'Gems from Black and White Era'. கறுப்பு - வெள்ளை உடையிலேயே பாடகர்கள் தோன்றியது ஒரு புதுமை என்றால், அந்தக் காலத்தின் பிரபலமான 'பர்ஸாத்', 'ஆவாரா', 'துலாரி', 'நௌஜவான்' படப் பாடல்கள் இடம் பெறாதது சற்று ஏமாற்றம்தான். அன்றைய முக்கிய சிறப்பு விருந்தினர்கள் 'விச்ராந்தி' முதியோர் இல்லத்தின் மூத்த குடிமக்கள்.



இன்றைய சங்கீத உலகில் அருணாவும் ஆரவாரமும் இணை பிரியாதவை. அருணா சாய்ராமின் ஆர்ப்பாட்டமான இசையை ரசிகர்கள் ஆரவாரத்துடன் ரசிக்கின்றனர். ராஜலட்சுமி ஆடியோ நிறுவனம் அருணா சாய்ராமின் கச்சேரி விருந்து தேர்ந்தெடுத்து 'கண்ணனும் கந்தனும்' என்ற தலைப்பில் இரு சிடிக்களை வெளியிட்டுள்ளது. அருணா அவருக்கே உரிய பாணியில் கண்ணனையும் கந்தனையும் பற்றி மாற்றி மாற்றிப் பாடி உள்ளார்.

அருணாவின் குரலில் இனிமை குறைவு; வலிமை அதிகம். அதனால் மெல்லினங்கள் கூட வல்லினமாக ஒலிக்கும். ஆனால் இந்தத் தொகுப்பில் அவரது மெல்லினங்கள் சற்று மேலாக மிதக்கின்றன. ஆலாபனை கல்யாணி, ஹிந்தோள ராகங்களுக்கு மட்டுமே. மற்றவை வெறும் பாடல்களாகவே நகர்கின்றன. வேதக்ரியா, த்வஜாவந்தி, ஜெயந்தஸ்ரீ, சிவரஞ்சனி, நீலமணி (மதுரை சோமுவின் 'என்ன கவி பாடினாலும்' இந்த ராகமாம்!) போன்ற புதுப்புது ராகங்கள் முக்கியப் பங்கு வகிக்கின்றன.

அருணா ரசிகர்களுக்கு இந்தத் தொகுப்பு விருந்து, தேர்ந்த கர்நாடக ரசிகர்களுக்கு ம்ஹூம்... மருந்து..!

- ஜோதி ஸ்வரூபிணி

◆ மதுரையிலிருந்து அமெரிக்கத் தலைநகருக்குத் தப்பியோடும் தீவிரவாதி. அவனைத் துரத்திக் கொண்டு ஓடுகிறார் நேர்மைக்கும், துணிச்சலுக்கும் பெயர் பெற்ற ராகவன் - ஐ.பி.எஸ். தீவிரவாதியைப் பிடிக்க அமெரிக்க உளவுத் துறை - போலீஸுடன் கைகோத்துக் கொண்டு, ராகவன் நிகழ்த்துகிற சாகஸங்களின் ஆக்‌ஷன் ஆல்பம்தான் 'வேட்டையாடு விளையாடு.'

◆ பதின்மூன்று ஆண்டுகளுக்குப் பிறகு (குருதிப்புனல்), போலீஸ் அதிகாரியாக மீண்டும் காக்கிச்சட்டை அணிந்து கம்பீரமாக நடித்திருக்கிறார் கமல்.

# மேயரை மடக்கி கமல்!

◆ கதைப்படி, படத்தின் இரண்டாவது பாதி முழுவதும் அமெரிக்காவில் நிகழ்வதால், அங்கே படப்பிடிப்பு நடத்த அனுமதி கேட்டு, நியூயார்க் நகர மேயருக்கு மொத்த திரைக்கதையையும் படிக்கக் கொடுத்திருக்கிறார்கள். ஸ்கிரிப்டை படித்த மேயர், பல வில்லங்கமான காட்சிகள், அமெரிக்க உளவுத் துறை போலீசான எஃப்.பி.ஐ.க்கு எதிராக இருப்பதைப் பார்த்து அலறி இருக்கிறார். ஆனால் கமல் விடாப்பிடியாக அவருடன் விவாதம் செய்து மேயருக்கு இதுவரை எடுத்த 'மருதநாயகம்' படக்காட்சிகளை போட்டுக் காட்டி,



• ஜோதிகாவுடன்...



• கமலினியுடன்...

அவரைத் தமது ரசிகராகவே மாற்றி விட்டாராம்.

◆ மேயரின் உதவியோடு, எஃப்.பி.ஐ தலைமை அலுவலகத்திலும் படப்பிடிப்பு நடத்த அனுமதி பெற்று, அங்கே பணிபுரியும் நிஜ போலீஸ் ஆபீசரையே தமது கவுண்டர்பார்ட்டாக நடிக்க வைத்து அசத்தியிருக்கிறார் கமல்.

◆ படத்தின் பரபரப்பான அம்சம் என்று பேசப்படும் சேஸிங் காட்சிகளை, நியூயார்க்கின் பிஸியான வீதிகளில் படம்பிடித்துக் கொண்டிருக்கும் போது, 'அமெரிக்கன் ஃபிலிம் ஸ்கூல் மாணவர்கள் கமலைத் தேடி வந்து அவரோடு உரையாடிச் சென்றிருக்கிறார்கள்.

◆ உயரமான கட்டடத்திலிருந்து குதிப்பது, நாலாயிரம் டன் எடையுள்ள டேங்கர் டிரக் ஓட்டுவது, போலீஸ் பைக்கில் பறப்பது என்று படத்தில் கமல் புரிந்திருக்கும் சாகஸங்களைப் பார்த்து வியந்து போய், இப்போது படத்தை ஆங்கிலத்தில் டப் செய்யலாமா என்று யோசித்துக் கொண்டிருக்கிறார்களாம்.

◆ ஜோதிகா, கமலினி முகர்ஜிக்கு இணையாக இளமையான தோற்றத்துடன் கமல் காட்சியளிப்பதைப் பார்த்த ரஜினிகாந்த், கமலிடம் திடீர் இளமையின் ரகசியத்தை விசாரித்திருக்கிறார். அஜித்துக்கு உடலைக் குறைக்க டிப்ஸ் கொடுத்ததும் கமல்தான் என்கிறது கோலிவுட்!

• ஸ்ரீ

படங்கள் உதவி : நிகில்

## உலகை உலுக்கிய குற்றங்கள் 4

# இரவுப் பிசாசு!

எங்கு பார்த்தாலும் இரவுப் பிசாசைப் பற்றியே பேச்சு. அடுத்து, யாரைத் தாக்குவான்? யாரைக் கொல்வான்? யாருக்கும் தெரியவில்லை. குழந்தைகள் பள்ளிக்குப் போகக் கூட முடியாமல் வீடுகளிலேயே அடைந்து கிடந்தனர். தெருக்களில் நடமாட்டம் குறைந்துவிட்டது.

வேட்டை நாய்களை வாங்குவோரின் எண்ணிக்கை கூடியது. அனைத்து வீடுகளிலும் யாராவது ஒரு நபர் சுழற்சி முறையில் இரவில் கொட்டக் கொட்ட கண் விழித்து நாயின் கழுத்தைத் தடவிக் கொடுத்தபடி வாசல் படிக்கட்டில் அமர்ந்திருந்தனர். ("இன்னிக்கு நான் தூங்கறேன். நாளைக்கு நீ தூங்கிக்கோ, சரியா?" "லொள்... லொள்").

இந்நிலையில் ரிச்சர்ட் ராமிரேஜைப் (இரவுப் பிசாசு) பற்றி முதல் முறையாக ஒரு உருப்படியான துப்பு கிடைத்தது. ஜேம்ஸ் ரொமெரோ என்பவன் தனது வீட்டு வாசலில் ஒரு டொயோட்டோ கார் மீண்டும் மீண்டும் வட்டமடித்துக் கொண்டிருப்பதாகவும் அது பிசாசாக இருக்குமோ என்றுதான் அச்சப்படுவதாகவும் தெரிவித்தான். அந்த மர்ம டொயோட்டா காரின் பதிவு எண்ணையும் அவன் தெரிவித்தான். அதே கார் அதே நாள் வேறொரு பகுதியில் கடந்து போவதை ரெனடா என்பவன் கண்டறிந்தான்.

வழக்கு தீவிரமடைந்தது. டொயோட்டா காரைப் பார்ப்பவர்கள் அனைவரும் அலறினர். டொயோட்டா பற்றிய தகவல் பரவியது. இரண்டு நாட்கள் கழித்து அந்தக் கார், ரம்பார்ட் எனும் பகுதிக்கு அருகேயுள்ள ஒரு பூங்காவில் கண்டுபிடிக்கப்பட்டது.

கார் கிடைத்துவிட்டது. ஆனால் இதில் பிசாசுதான் பயணம் செய்தான் என்பதற்கு என்ன ஆதாரம்? இந்த இடத்தில் ஃபாரன்ஸிக் அறிவியல் துறை உதவிக்கு வந்தது. முதல் முறையாக ஃபாரன்ஸிக் அதிகாரிகள் புரட்சிகரமான முறையில் இயங்கினார்கள். முதலில் ஒருவித பசை காரின் உட்பகுதியில் ஒட்டப்பட்டது. பிறகு காரின் கதவையும், ஜன்னலையும் இறுக்கமாக மூடினார்கள். நேரம் செல்லச் செல்ல உள்ளிருந்த பசை சூடான காற்றோடு கலந்து புகையத் தொடங்கியது. சிறிது சிறிதாகக் கார் முழுவதும் புகை பரவப் பரவ, கைரேகைகள் மெள்ள வெளிச்சத்துக்கு வந்தன. பிறகு லேசர் கதிர்களைக் கொண்டு ரேகைகள் தெளிவாகச் சேகரிக்கப்பட்டன.



• சிவராச்சலை

கைரேகை கிடைத்தவுடன் பிசாசையே கண்டுபிடித்துவிட்டதைப் போன்ற மகிழ்ச்சி. உடனடியாகக் கைரேகைகள் ஒப்பிடப்பட்டன. கம்ப்யூட்டர் சமர்த்தாக சம்பந்தப்பட்டவரின் பெயர், ஜாதக விபரங்களை உமிழ்ந்தது. பெயர் - ரிச்சர்ட் ராமிரேஜ். வயது 25. குற்றம் - கார் ஜேப்படி. அடையாளம் - எப்பொழுது வேண்டுமானாலும் உடைந்து விழலாம் போன்ற ஒல்லிப்பிச்சான் தோற்றம். பிசாசுக் கண்கள். பிறகென்ன? ஒவ்வொரு பத்திரிகையிலும் முதல் பக்கச் செய்தி இவன்தான். பத்திரிகையைப்

புரட்டிய ஒவ்வொருவரும் அவனது உருவத்தைப் பார்த்து திடுக்கிட்டனர்.

ஆகஸ்ட் 31. கொறிப்பதற்குக் கொஞ்சம் வறுகடலை, சாக்லெட், ஒரு பெப்ஸி புட்டி எல்லாவற்றையும் வாங்கிக் கொண்டு விசிலடித்தபடியே வெளியே வந்த ரிச்சர்ட் ராமிரேஜ் அதிர்ந்து போனான். அனைத்துக் கடைகளிலும், இவனது புகைப்படம் தான். எங்கு திரும்பினாலும் இவன்தான். அடியில் கொட்டை எழுத்தில் ஒரு அறிவிப்பு. 'இரவுப் பிசாசை கண்டுபிடித்துவிட்டோம். இதோ இவன்தான்.'

கையிலிருந்ததை அப்படியே கீழே போட்டுவிட்டு ஓடத் தொடங்கினான் ரிச்சர்ட். கிட்டத்தட்ட 2 கி.மீ. தலை தெறிக்க ஓடிய பிறகு அயர்ந்து போய் நின்றான். அவ்வளவு தான். இரவுப் பிசாசு தெருவில் ஓடுவதைக் கவனித்த பொதுமக்கள் அவனைத் துரத்தத் தொடங்கினர். காவல்துறைக்குத் தகவல் பறந்தது.



• ரிச்சர்ட்




வழியில் ஒரு கார் அனாதையாக நிற்பதைக் கவனித்த ரிச்சர்ட், அவசர அவசரமாக அந்தக் காருக்குள் நுழைந்தான். ஆனால் பின்னால் ஒளிந்திருந்த லூயிஸ் ரிச்சர்ட் என்பவன் ரிச்சர்டின் மண்டையில் மிகச் சரியாகத் தாக்கினான். முதல் அடி வாங்கி ரிச்சர்ட் தடுமாறத் தொடங்கியதும் மக்களுக்குச் சிறிது பயம் விலகியது. கையில் கிடைத்த பிச்சுவா, அலுமினியக் கம்பி, ஹாக்கி மட்டை எல்லாவற்றையும் தூக்கிக் கொண்டு ஒரு பெரிய கும்பல் அவனைச் சூழ்ந்து கொண்டது. ஆட்டம் முடிந்தது என்று தெரிந்ததும் தனது கைகளை எரிச்சலுடன் மேலே உயர்த்தினான் ரிச்சர்ட்.

விசாரணை தொடங்கியது தான் தாமதம். தனது உட்டாலக்கடி வேலைகளைத் தொடங்கினான் ரிச்சர்ட். தான் ஒரு அப்பிராணி என்றும் தன்னைப் போலவே வேறொரு நபர் இருப்பதாகவும் தவறுதலாகத் தன்னைப் பிடித்துவிட்டதாகவும் வாதாடினான். 'அடப்போய்யா' என்று அவனை ஒதுக்கித் தள்ளிய காவல்துறை அவன் மீது 13 கொலை வழக்குகளையும் 30 குற்றங்களையும் சுமத்தியது.

ரிச்சர்ட் இயல்பிலேயே மிகச் சாதுவான நபர் என்றும், ஏதோ ஒரு பேய் அவன் உடலுக்குள் புகுந்துவிட்டதால் சுய நினைவின்றி கொஞ்சம் 'அப்படி இப்படி' நடந்து கொண்டான் என்றும் ரிச்சர்ட்டின் வக்கீல் ஒருவர் வாதிட்டார். ரிச்சர்டை வீட்டுக்கு அனுப்பிவிட்டு அவன் உடலுக்குள் புகுந்த பேயை விசாரிக்க வேண்டும் என்றும் யோசனை வழங்கினார்.

மற்றொரு புறம் ரிச்சர்ட்டுக்கு பல ஆதரவாளர்கள் தோன்றினர். குறிப்பாக இளம் பெண்கள். 'ச்சே, பாவம்பா. இவன் ரொம்ப நல்லவன்' என்று அவனுக்காக ஏங்கினர். ஆச்சரியம். அக்டோபர் 1996-ல் டோரியன் எனும் இளம் பத்திரிகை ஆசிரியர் ரிச்சர்ட்டைக் காதலித்து திருமணம் செய்து கொண்டார். "என் புருஷன் உத்தம புத்திரர். சூது வாது தெரியாதவர்" என்று அறிவித்தார்.

ரிச்சர்டைக் காப்பாற்ற தலைகீழாக நின்று பார்த்தனர் அவரது வக்கீல்கள். எதுவும் எடுபடவில்லை. இப்பொழுது இவனுக்கு மரண தண்டனை விதிக்கப்பட்டுள்ளது. சான் க்வெண்டின் எனும் சிறையில் தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டு உட்கார்ந்திருக்கிறான் இந்த அப்பாவி இரவுப் பிசாசு.

(திகில் பரவும்)

–மருதன்

# மருதாணி விரல்கள்!

"அம்மா, உன்னைப் பார்க்கறதுக்காக, ஸ்பெஷலா ஒரு வாரம் லீவு எடுத்துட்டு அடுத்த புதன்கிழமை வர்றா நிஷா," - மேகலாவின் குரல் தேன் போல் இனிக்கிறது பாக்யத்துக்கு.

செல்லமாக வளர்த்த பேத்தியாச்சே! அஞ்சு வருஷமாச்சு பார்த்து. பெங்களூருக்குப் படிக்கப் போனவள்தான். அங்கேயே வேலை கிடைத்து விட மேகலாவும் ரமேஷும்தான் ஒரு தடவை அங்கே போயிருந்தார்கள், பெண்ணைப் பார்க்க.

'வரட்டும். அவளுக்குப் பிடித்த தேங்காய்ப் பால் ஆப்பம் பண்ணிக் கொடுக்கணும்.

மருதாணி அரைச்சு வைக்கணும். பத்து விரலிலும் போட்டுக்கிட்டு, 'தலை அரிக்குது. சொறிஞ்சு விடு பாட்டி'ன்னு சிணுங்குவாளே. அதைப் பாக்கணும்.

பல்லாங்குழியிலே நாலு முத்து பகவா அள்ளுவாளே. அதை ரசிச்சு அவகிட்டே தோத்துப் போகணும்.

ஒரு நா சாயந்திரம் கோயிலுக்குக் கூட்டிப் போகணும். குளத்து மீன்களுக்கு பொரி போட்டுட்டு குழந்தை போல குதிப்பாளே? அவளோட பேவரிட் சித்தி வீட்டுக்குப் போகணும். அவங்க வீட்டு மில்க் ஷேக் அவளுக்கு ரொம்பப் பிடிக்கும்.'

ஒரு வாரத்துக்கும் முழு நிகழ்ச்சி நிரல் தயாரித்துக் காத்துக் கிடந்தாள் பாக்யம்.

வந்தாள் நிஷா.

"ஹாய் பாட்டி, எப்படி இருக்கே?" என்றபடி ஷூவை உதறிவிட்டு சோபாவில் சரிந்தாள்.

ஜீன்ஸ், டீ ஷர்ட்டில் ஒல்லியாக இருந்தாள் நிஷா. 'கொழுகொழு' வென்று இருந்தவள் எப்படி இப்படி மெலிந்து...

"அம்மா, சீக்கிரம் கிளம்பு. பக்கத்துலே பியூட்டி பார்லர் இருக்கா பாரு. நெயில் ஷோட ஷைனிங் போச்சு பாரு" என்றபடி தனது விரல் நகங்களைக் காண்பித்தாள்.

அரை மணி

பேச்சை ஆரம்பிக்க "படு போர் பாட்டி, போன்லே பேசி விசாரிக்கக்கறேன்" என்ற பதில்.

இதே போல்தான் பல்லாங்குழி கட்டையை எடுத்து வைத்து, சோவியை, குழிகளில் நிரப்பி பரிதாபமாகப் பார்க்கத்தான் முடிந்தது பாக்யத்தால். நிஷா, நேரத்தில் அம்மாவும் பெண்ணும் கிளம்பி விட்டார்கள். பாக்யம் அரைத்து வைத்திருந்த மருதாணி காய ஆரம்பித்தது.

மறுநாள் 'தேங்காய்ப் பால் ஆப்பம் செய்யவா?' என்று கேட்ட பாட்டிக்கு, "ஓ, தோசைக்கு நடுவே உப்பிய இட்லியை ஒட்ட வச்ச மாதிரி இருக்குமே...? அதுவா... வேணாம். டபுள் சீஸ் ஸ்பெஷல் டாப்பிங்கோடு பிஸ்ஸாவுக்கு ஆர்டர் பண்ணிக்கலாம்" என்றபடி படுக்கையில் போய் விழுந்தாள்.

சாயந்தரம் தயங்கித் தயங்கி வந்து கேட்டாள். "ஏம்மா, கோயிலுக்குப் போகலாமா?"

"அய்யய்யே, டிஸ்கோ பார்ட்டி இருக்கு பாட்டி" என்று தலையைக் கலைத்துக்கொண்டாள்.

ஒருநாள் சித்தி வீட்டுக்குப் போகும்

நாகேந்திரபாரதி

அப்பாவோடு பறந்திருந்தாள், 'கோ கார்டிங்' விளையாட!

ஒரு வாரம் ஓடியதே தெரியவில்லை. "ஓகே பாட்டி, உன்னோட கூடவே ஒரு வாரம் இருந்தது ரொம்பத் திருப்தியா இருந்துச்சு. உடம்பைப் பார்த்துக்க, வரட்டுமா?" என்று தோளில் முடி பறக்க விரைந்தாள் நிஷா.

'டாட்டா' காட்டி கையை அசைத்த போதுதான் தன் விரல்களைக் கவனித்தாள் பாக்கியம்... உள்ளங்கையில் மருதாணி பவழச் சிவப்பாகப் பற்றியிருந்தது எப்போதும் போல. ○



சென்ற ஆண்டின் இறுதி நாளன்று பிரான்ஸிலிருந்து கிளம்பியது அந்தக் கப்பல்.

ஆனால் 2006-ன் தொடக்கமே அதற்குச் சோதனை காத்திருந்தது. நடுக்கடலில் இலக்கில்லாமல் தத்தளிக்கத் தொடங்கியது.

என்ன காரணம்? டைட்டானிக்குக்கு நேர்ந்தது போல் ஏதாவது பனிப்பாறை தாக்கிவிட்டதா? இல்லை. சுற்றுப்புறச்சூழல் ஆர்வ அமைப்பான க்ரீன் பீஸ் அமைப்பின் எதிர்ப்புக் கொடியே இதற்கு முக்கியக் காரணம்.

ஏதோ வெளிநாட்டுச் செய்தி என்று எண்ணி விட வேண்டாம். நாம் சம்பந்தப்பட்டதுதான். பிரான்ஸிலிருந்து கிளம்பிய அந்தக் கப்பல் சுமார் ஏழாயிரம் கிலோ மீட்டர்கள் கடந்து வந்து சேர்ந்திருக்க வேண்டிய இடம் குஜராத் மாநிலத்திலுள்ள ஆலாங் துறைமுகம்.

கிளெமென்சியு - இதுதான் அந்தக் கப்பலின் பெயர். 1991-ல் வளைகுடாப் போரில் பயன்படுத்தப்பட்ட போர்க் கப்பல்.

நாற்பது வயதான இந்தக் கப்பல். இனி தனக்குத் தேவையில்லை என்று மூன்று வருடங்களுக்கு முன்பே பிரான்ஸ் முடிவெடுத்து விட்டது. என்றாலும் முதலில் ஸ்பெயின், பிறகு கிரீஸ் என்று சில நாடுகளுக்கு விற்க முடிவாகி கடைசி நிமிடத்தில் ஒப்பந்தங்கள் வெவ்வேறு காரணங்களால் ரத்தாயின. பிறகுதான் அந்தக் கப்பல் இந்தியாவை நோக்கித் தன் பயணத்தைத் தொடங்கியது.

இன்று இந்த விஷயம் பற்றி எரிகிறது என்றாலும், திரிக்கு நெருப்பு வைத்தது எகிப்து நாடுதான். மேற்படி கப்பலில் ஆயிரம் டன்னுக்கும் அதிகமாக ஆஸ்பெஸ்டாஸ் இருப்பதாகக் கருதப்பட, எகிப்து இதை சூயஸ் கால்வாய்க்குள் அனுமதிக்க மறுத்தது.

அப்போதுதான் விஷயம் உலகெங்கும் பரபரப்பான விவாதத்துக்குள்ளானது 'நச்சுக் கழிவுகளைத் தாங்கிய கப்பலைத் தங்கள் நாடு வழியாக அனுமதிக்கவே ஒருநாடு மறுக்கிறது. ஆனால் அப்படிப்பட்ட ஆபத்தான பொருளை நம் நாட்டுக்கு வரவிடுவதா?' இந்தியாவிலும் கவலைக் குரல்கள் ஒலிக்கத் துவங்கின.

"இந்தக் கப்பல் ஒன்றும் ஆபத்தான வாகனம் அல்ல" என்றார் பிரான்ஸ் கவர்னர். ஒருவழியாக எல்லா ஆவணங்களையும் சரிபார்த்த சூயஸ் கால்வாய் நிர்வாகிகள் இந்தக் கப்பலைத் தொடர்ந்து பயணிக்க அனுமதி கொடுத்து விட்டார்கள். மூன்று நாட்கள் சூயஸ் கால்வாய் எல்லையிலேயே தங்க வைக்கப்பட்ட கப்பல் மீண்டும் இந்தியாவை நோக்கி வரத் தொடங்கி இருக்கிறது.

கப்பலின் உரிமையாளருக்கு ஒரு புதிய பிரச்னை. பிப்ரவரி 13 அன்று இந்திய எல்லையை இந்தக் கப்பல் தொட்டு விடும். அப்போது அதற்கு இந்தியா அனுமதி மறுத்தால் மீண்டும் கட்டணம் செலுத்தித்தான் சூயஸ் கால்வாயைத் தாண்டி பிரான்ஸுக்குச் செல்ல வேண்டும். போக்குவரத்துக் கட்டணமே பல லட்சங்கள் ஆகிவிடும்.

என்றாலும், "இந்தியக் கடற்கரை யிலிருந்து 220 கடல் மைல் தொலைவிலேயே கப்பல் நிறுத்தப்படும்" என்று கப்பல் உரிமையாளர் உறுதியளித்திருக்கிறார்.

ஆஸ்பெஸ்டாஸ் நமக்குப் பழக்க மான ஒன்றுதானே? இதற்கு ஏன் இவ்வளவு பரபரப்பு என்பவரா

ஜி.எஸ்.எஸ்.

நீங்கள்? ஆஸ்பெஸ்டினால் நுரையீரல் புற்றுநோய் உண்டாகக்கூடும். மார்பு மற்றும் வயிற்றுப் பகுதிகளில் உட்புறச் சுவரில் உள்ள திசுக்களும் பாதிக்கப்படலாம். இதைவிட வேறென்ன ஆபத்து?

ஆஸ்பெஸ்டாஸ் நாற்பது நாடுகளில் தடைசெய்யப்பட்டிருக்கிறது. அவற்றில் ஆஸ்திரேலியா, உருகுவே, ஐரோப்பிய யூனியன் நாடுகள் ஆகியவையும் உண்டு. சமீபத்தில் ஜப்பானும் ஆஸ்பெஸ்டாஸ் தடைக்கு ஒத்துக் கொண்டிருக்கிறது. ஆனால் இந்திய சுரங்கக் கழகம் மட்டும் ஆஸ்பெஸ்டாஸ் இந்தியத் தொழிலாளிகளுக்குப் பாதுகாப்பானதுதான் என்கிறது.

"இந்தியாவில் ஆண்டுதோறும் 1.25 லட்சம் டன் ஆஸ்பெஸ்டாஸ் பயன்படுத்தப்படுகிறது. அதில் ஒரு லட்சம் டன் ஆஸ்பெஸ்டாஸ் இறக்குமதி செய்யப்படுகிறது. இந்தியாவில் மொத்தம் பதினெட்டு ஆஸ்பெஸ்டாஸ் சிமெண்ட் தொழிற்சாலைகள் உள்ளன.

கப்பல் உடைக்கும் தொழிலை இந்தியா முழுவதுமாக நிறுத்தி விடுவது சாத்தியமில்லை. அதிக வேலை வாய்ப்பு கொண்ட துறை இது. தவிர மறு சுழற்சிக்கான இரும்பு மூலப்பொருள்கள் இதன் மூலம் கிடைக்கின்றன. எனவே தங்க முட்டையிடும் வாத்தைக் கொல்வது சரியல்ல. ஐரோப்பிய நாடுகளில் நீல ஆஸ்பெஸ்டாஸ் அனுமதிக்கப்பட்டது. எனவே விபரீதம் உண்டானது. ஆனால் நம் நாட்டில் குறைந்த அளவு மாசு கொண்ட வெள்ளை ஆஸ்பெஸ்டாஸ்தான் சிமெண்டுடன் பயன்படுத்தப்படுகிறது. எனவே கவலை வேண்டாம்" என்கிறது நம் மத்திய சுற்றுச்சூழல் அமைச்சகம்.

கண்கெட்ட பிறகும் கூட...

# வருகிறது அபாயம்!



# கரணின் மறுபிரவேசம்

"**ப**டம் முழுக்க ஹீரோ ஃப்ரெண்டா நடிக்க ஒருத்தர் வேணுமே."

"அப்பாடியா கரணைக் கூப்பிட்டா போச்சு."

"'மாரியம்மா'னு பக்திப் படம் பண்றோம். வில்லன் வேஷத்துக்கு ஆள் வேணுமே."

"அட, நம்ம கரண் எதுக்கு இருக்காரு. அவரைக் கூப்பிடுங்கப்பா"

இரண்டு வருடங்களுக்கு முன்வரை கரணின் நிலைமை இவ்வளவுதான். ஹீரோவின் தோழனாகவும் கடவுளுக்கே சவால் விடும் கேரக்டர்களிலும் சில சமயங்களில் கதை திருப்புமுனைக்காக ஒரு சில நிமிடங்கள் வந்து போவதும் என... சாப்பாடு இலையில் ஓரமாக வைக்கப்படும் அவியலாக மட்டும் பயன்படுத்தப்பட்டவர், இன்று ஜம்மென்று 'கொக்கி' படத்தின் ஹீரோவாக ஆகிவிட்டார். தமிழ் சினிமாவில் காணாமல் போயிருந்தவரை 'கொக்கி' அலுவலகத்தில் வைத்துப் பிடித்தோம். புது உற்சாகத்தோடு பேச ஆரம்பித்தார்.

"இதுவரைக்கும் ஐம்பத்தெட்டு தமிழ்ப் படங்கள் நடிச்சுருக்கேன். 'நம்மவர்'ல கமலோடு ஆரம்பிச்சது. நாட்கள் கடகடன்னு ஓடிடுச்சு. ஒரு சமயத்துல என்னடா எல்லாமே திரும்பத் திரும்ப பண்றோமோங்கிற எண்ணம்

## "என்னை பைத்தியக்காரன்னு சொன்னாங்க!"



• 'கொக்கி'-யில் கரண் - சந்தனா

வந்துருச்சு. நான் பண்ணின வில்லன் ரோல்களை விரல் விட்டு எண்ணிடலாம். 'கண்ணெதிரே தோன்றினாள்', 'கோகுலத்தில் சீதை', 'காதல் கோட்டை', 'லவ் டுடே' படங்கள்ல நான் வில்லன் கிடையாது. ஆனா நான் வில்லனா பண்ண படங்கள் பெருசா பேசப்பட்டதால தொடர்ந்து கரண் என்றால் வில்லன் ரோலுக்குத்தான் லாயக்குன்னு ஒரு முத்திரை விழுந்திருச்சு. ஒரே நாள்ல மூணு பட ஷூட்டிங் எல்லாம் நடிச்சுருக்கேன். வாழ்க்கை ஹெக்டிக்கா இருந்துச்சு. உடல் ரீதியாவும் மனரீதியாவும் மாத்திக்க நினைச்சேன்.

இன்னைக்கும் கேரக்டர் ரோல் எத்தனையோ பேர் தொடர்ந்து பண்ணிட்டுத்தான் இருக்காங்க. ஆனா அதுல எப்பவுமே ஒரு வரையறை இருக்கு. கீழே தூண்கள் எழுப்பி ஹீரோங்கிற கோபுரம் எழுப்ப எல்லோரும் பாடுபட வேண்டியிருக்கு. போதும்டா சாமி. இனி நடிச்சா ஹீரோவாதான் நடிக்கணும்னு நினைச்சு எனக்கு நானே ஒரு இடைவெளி ஏற்படுத்திக்கிட்டேன். 'நம்மவர்'ல நான் ரொம்ப ஃபிட்டா இருப்பேன். அப்புறம் லைப் ஸ்டைலே மாறிடுச்சு. சாப்பிடும் பழக்கம் தாறுமாறாயிடுச்சு. சோம்பேறித்தனத்தால என்னைக் கவனிக்காம விட்டுட்டேன். 'திருநெல்வேலி' படத்துல வயசான கேரக்டர்ல நடிச்சபோதே நிறையப் பேர் எச்சரிச்சாங்க. அப்போதும் உடற்கட்டு ஸ்டைலாதான் இருந்துச்சு. ஆனா 'திருநெல்வேலி'க்காக மேலும் வெயிட் போட்டேன். அதுல ஊதினவன்தான்... அப்புறம் வெயிட்



இறங்கவேயில்லை. ஓயாத அலைச்சல். ஒரே நாள்ல மூணு படப்பிடிப்புகள்ல கலந்துகிட்டதால என்னால உடனடியா அடுத்தடுத்த கேரக்டர்களுக்கு தனிக் கவனம் செலுத்த முடியலை. திடீரென ஒருநாள் யோசிச்சபோதுதான் 'ஆஹா இப்படியே விட்டா வேலைக்கா காது'ன்னு சுதாரிச்சுக்கிட்டேன்.

இரண்டு வருடங்கள் இடைவெளி விட்டேன். 43 பட வாய்ப்புகள், என் வீட்டுக் கதவைத் தட்டுச்சு. கையெடுத்துக் கும்பிட்டுத் திருப்பி அனுப்பினேன். பண இழப்புகளும் ஏற்பட்டுச்சு. இதைப் பார்த்து என் நண்பர்கள் என்னைப் பைத்தியக்காரன்னுகூட சொன்னாங்க. 'பாரு, இனிமே உன்னை யாரும் கூப்பிட மாட்டாங்க'ன்னு வேற பயமுறுத்தினாங்க. ஆனாலும் இனி ஹீரோவாதான் நடிக்கணும்ங்கற முடிவுல பின்வாங்கலை. மெனக்கெட்டு 23 கிலோ வெயிட்டைக் குறைச்சேன். ஓய்வுல நிறையப் புத்தகங்கள் படிச்சேன். விழுந்து விழுந்து படங்கள் பார்த்தேன். எதிர் காலத்துக்குத் தேவையான ஹோம்வொர்க் பண்ணினேன்.

கடந்த ஐந்து வருஷமாவே என்னை ஹீரோவாக்கணும்னு நிறைய பேர் முயற்சி செஞ்சாங்க. ஆனா எதுவும் எனக்கான படங்கள் இல்லை.

நிறைய ஸ்கிரிப்ட் கேட்டதுல 'கிங்' படம் பண்ணின சாலமனோட 'கொக்கி' கதை பிடிச்சது. 'என்னைப் போய் எப்படித் தேர்ந்தெடுத்தீங்க?'ன்னு அவர்கிட்ட கேட்டேன். 'இல்லை, கதை உருவாக்கும் போதே உங்களை மனசுல வச்சுட்டுதான் கதை பண்ணினேன்'னு சொன்னார். உடனே புது யுத்தத்துக்குத் தயாராயிட்டேன். 'கொக்கி' நிச்சயம் ஆர்ட் ஃபிலிம் கிடையாது. ஆக்ஷன் படம். மேக்கிங்கில நிறைய வித்தியாசம் இருக்கும். என் இயல்பான மேனரிஸம் மாத்தியிருக்கேன். கரணை நம்பாம கதைய மட்டும் நம்பி எடுக்கிற படம் இது.

இனிமே நான் ஹீரோவா அதுவும் ஆக்ஷன் ஹீரோவாதான் நடிப்பேன். வீர வசனம், பஞ்ச் டயலாக் எல்லாம் பேசி எல்லை மீற மாட்டேன்" என்று பட படவென பேசிய கரண் ஐந்து வருடங்களுக்கு முன்பே 'சேது' படத்தின் மூலமாக ஹீரோவாகியிருக்க வேண்டியவர். பாலா விக்ரமை அழைக்கும்முன் கரணைத்தான் சீயான் வேடத்துக்கு முதலில் அழைத்திருக்கிறார்.

"ப்ச்... சேதுல நடிக்க முடியாம போனது உண்மைதான். பாலா சார் மொட்டை அடிக்கணும்னு சொன்னதால் தயங்கிட்டேன். அந்த நேரத்துல நிறையப் படங்கள் ஒத்துக்கிட்டதாலயும் முடியாம போச்சு. ஆனா படம் பார்த்து வியந்துபோய் 'இந்தப் படம் ஓடலைன்னா ரசனைக்கே ஆபத்து'ன்னு பேட்டிகள் கொடுத்தேன். சேது ஜெயிக்க மனமுருக வேண்டினேன். மத்தபடி பெரிய வருத்தமெல்லாம் இல்லை. ஒருவேளை நான் நடிச்சுருந்தா சேது பெயிலியர் ஆகியிருக்கலாம் இல்லையா!

திறமை வாய்ந்த தமிழ் சினிமாவுல நானும் இருக்கிறது ஒரு வரம்தான். நம்மளை எங்கப் பார்த்தாலும் மக்கள் அடையற சந்தோஷம்தான் ஒரு நடிகருக்கான உச்சகட்ட கூலி. மத்தபடி நான் யாருக்கும் போட்டி கிடையாது. எல்லாம் மக்கள் எழுதுற தீர்ப்புல தானே இருக்கு?"

- ச.ந.கண்ணன்

"டைரக்டர் எதுக்கு அப்போ பிடிச்சு ரயில்வே கைடுல மூழ்கிட்டார்? அவுட்டோர் ஷூட்டிங்குக்கு ரிசர்வ் பண்ணப் போறாரா ?"

"இல்லை... அடுத்த படத்துக்கு டைட்டில் தேடறார்!"

- சம்பத் குமாரி



# ஈச்வர உத்தேசம்!



"வஸந்தகாலம் எப்படி ஒரு ஸொந்த உத்தேசமுமில்லாமல் லோகத்தில் பசுமையையும் செழிப்பையும் ஏற்படுத்திக் கொண்டு போகிறதோ அப்படி ஞானியும் லோகத்தில் ஹிதத்தைத் தன் உத்தேசமில்லாமலே ஏற்படுத்திக் கொண்டு போகிறான்; தான் ஸம்ஸாரத்தைத் தாண்டியதோடு, பிறத்தியாரையும் ஒரு ஸ்வய காரணமும் இல்லாமல் தாண்டுவிக்கிறான்" என்று ஆசார்யாள் சொல்லியிருக்கிறார். இப்படிப் பிறரை உயர்த்துவதற்காக ஒரு ஞானி இருப்பது, அவனுடைய உத்தேசத்தினால் இல்லை. ஏனென்றால் அவனுக்கு எந்தவிதமான உத்தேசமும் இல்லை என்றால், பின்னே எப்படி நடக்கிறது? அவன் அப்படியிருக்க வேண்டுமென்று ஈச்வரன் உத்தேசம் பண்ணுவதால்தான்!

ஸம்ஸாரத்தைத் தாண்டுவதில் முதல் அங்கமான தர்ம வாழ்க்கைக்கு ஐடியலாகக்கூட ஒரு ஞானியை ஈச்வரன் இருக்கப் பண்ணுவதுண்டு. ஜனகர் அப்படித்தானிருந்தார். ஜனங்களுக்குப் புரிபடுவதான தர்மங்களையே ஞானியும் செய்து காட்டுகிறானென்று பகவானும் சொல்லியிருப்பதைப் பார்த்தோம்.

ஆகக்கூடி, ஞானிக்கு ஸ்வய உத்தேசம், உத்தேசிக்கும் மனஸ் எதுவும் இல்லாதபோது, அவனாக தர்மம், அதர்மம் என்று நினைத்து எதையும் பண்ணுவதுமில்லை; விடுவதுமில்லை. அவனை ஈச்வரனே கருவிமாத்ரமாகக் கார்யம் பண்ண வைக்கும்போது லோக ஹிதத்துக்காக, லோகத்தின் ஞான உயர்வுக்காக, அல்லது (லௌகிக) தர்மத்துக்கும்கூட ஒரு ஐடியலாகத்தான் இருக்கச் செய்கிறான்.

- ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சார்ய சுவாமிகள்

சப்தமே சாஸ்வதம்;
அதைச்
சொல்வதென்
சங்கக்கரம்!
இயக்கமே
உயிர்த்திறம்;
அதைச்
சொல்வதென்
சக்கரம்.
- ஸ்ரீ கிருஷ்ணன்



# எங்கே என் கண்ணன்?

பரிசோதிக்க வந்த டாக்டரோடு கூடவே வந்த அந்த சாதுக்கள் நோயாளிகளைக் கனிவுடன் பார்த்த விதமும், அவர்கள் தலையில் கைவைத்து வருடிக் கொடுத்த வாஞ்சையும் அலாதியாக இருந்தது. கவனித்தபடியே இருந்த சீனுவும் ராஜமும் அவர்கள் தங்களைச் சமீபிக்கவும் பரபரப்புக்கு ஆளாயினர். குறிப்பாகப் பயணத்தின் போது ரயில் பெட்டியில் உடன் வந்ததில் இருந்து, நர்மதை ஆற்றங்கரையில் கண்ணனைப் பற்றி பேசிச் சென்ற அந்த சித்த சன்யாசியை அவர்களோடு பார்க்கவும், இருவரிடமும் ஒரு ஆச்சரிய அதிர்வு ஏற்பட்டது. அவரும் புரிந்ததுபோல சீனுவின் சிரத்தின் மேல் கை வைத்து வருடியவர் அப்படியே தன் கரத்தை மார்புப் பாகத்துக்குக் கொண்டு வந்தார்...

"என்ன... பிரச்னை இங்க தானே?" - என்றும் கேட்டார். சீனுவிடம் ஆமோதிக்கும் பாவனை.

"எல்லாம் கண்ணன் பண்ற கூத்து..." - என்று உதட்டைச் சுழித்து சிரிக்க வேறு செய்தார்.

"ஸ்வாமி... நீங்க சொன்ன மாதிரியே கண்ணன் குதிச்சு ஓடிப்போயிட்டான். நான் ஜாக்ரதையா தான் இருந்தேன். ஆனா கண்ணை எதுவோ ஒண்ணு கட்டிடுத்து ஸ்வாமி..." என்றார்...

"எதுவோ ஒண்ணா... கண் வேற கண்ணன் வேறயா? அவன் தான் கட்டிட்டான். அவன் ஓட முடிவு செய்தா யாரால தடுக்க முடியும்? அவன் குதிச்சு ஓடற ஆறு... அதுல ஒரு துளிதான் நாம். துளிகளான நம்மால ஆத்தோட சேர்ந்து ஓடத்தானே முடியும்?"

டாக்டரே சற்று வியந்தவராக "உங்களுக்கு ஏற்கெனவே அறிமுகம் இருக்கா?"- என்று கேட்டார்.

"ஆமாம் டாக்டர்... ரயில் பயணத்துல ஸ்வாமிகளைப் பார்த்தேன். அப்புறம் நர்மதைக் கரைல... இப்ப இங்க... என்ன சம்பந்தம்னு தெரியல. தொடர்ந்து வந்துண்டே இருக்கார்" என்றார் சீனு.

அதற்கும் பதிலாக ஒரு மர்மச் சிரிப்பு சிரித்த அவர் சம்பத்தையும் சாருவையும் ஒரு பார்வை பார்த்தார். இருவரும் பதிலுக்கு அவரைச் சற்றுக் குழப்பத்தோடு பார்த்தனர். "என்ன... வேஷம் போட்ட கண்ணனைப் பற்றியும் வேதம் சொன்ன கண்ணனைப் பற்றியும் உங்களுக்குள்ள ஒரே குழப்பம் போல இருக்கு..." - என்று அவர்களைப் பார்த்துக் கேட்கவும் இருவரிடமும் ஒரு சிறிய திக்கு முக்காடல்.

"இவன் என் ஒரே பிள்ளை... இவ என் மாட்டுப் பொண். எனக்கு நெஞ்சுவலின்ன உடனே பறந்து வந்துருக்கா..."- என்று சீனு இருவரையும் அவருக்கு வேகமாக அறிமுகம் செய்தார். அப்போது படுத்திருப்பது தவறு



என்பது போல எழுந்து அமர முயன்றார். மார்புப் பூணூல் கையில் சிக்கிக் கொஞ்சம் தடை செய்தது.

அந்த சித்த சன்யாசி அதைப் பார்த்துச் சிரித்தார். பின் "பேசாம படுத்திரு.. நீ படுத்த தாலதான் இவன் இப்ப இங்க நிக்கறான்... சில விஷயங்கள் நடக்கும்போது அதிர்ச்சியா இருக்கும்... ஆனா அதுக்கு ஒரு முடிவு தெரிய வரும்போது அதே அதிர்ச்சி ஆனந்தமா மாறிடும். அரிசி சாதமாகற மாதிரி..." என்றவர் மார்பில் பூணூலைப் பார்த்து "இதை பிராமணன்கறதால தானே போட்டுருக்கே?" என்றும் கேட்டார்.

"ஆமாம் ஸ்வாமி..."

"பிராமணன்னா எதுக்குப் பூணூல்... காரணம் தெரியுமா?"- அவரது கேள்வி எல்லோரையுமே அவரை நோக்க வைத்தது.

''பெரியவா போட்டுவிட்டா... போட்டுண்டுருக்கேன். பெருசா காரணம் தெரியாது..."

"நான் சொல்லட்டுமா?"

''ஆஹா... புதுசா உங்க மூலமா ஒரு பொருள் தெரிய வந்தா சந்தோஷம் தானே?"

''பூணூலுக்கு எப்பவுமே ஒரே பொருள் தான். நாம் நமக்காக பூண்ட நூல்தான் பூணூல் ஆகறது. மொத்தத்துல இது நூல். நூல்னா புத்தகம்னும் ஒரு பொருள் உண்டு. புத்தகம் எழுத்தால ஆனது. எழுத்து சப்தத்தால ஆனது. சப்தத்தை சிறை பிடிச்சுட்டா எழுத்து இல்லியா?"

"ஸ்வாமி... இது ஒரு அருமையான வியாக்யானம்!"

"சொல்லி முடிச்சுடறேன். புத்தகம்கற படிப்பு அதாவது அந்தப் படிப்பு சப்தம் மனசுல குடி கொண்டு படிச்ச வன்ங்கற பெருமையைத் தந்து மனசோட மானத்தைக் காக்கும். அதாவது புத்தகம்கற நூல் மனசுக்கு.. புத்தாடைகள்ள இருக்கற நூல் உடம்புக்கு. ரெண்டுமே மானத்தைக் காக்கறதுங்க. மட்டுமா? இந்த ரெண்டு மாதிரி வளைஞ்சு கொடுக்க எதாலயும் முடியாது.

''ஸ்வாமி... உங்க வியாக்யானத்துக்கு ரொம்ப நன்றி. ரொம்பவும் ஆழ்ந்த கருத்து நீங்க சொன்னது. காரணமில்லாம இதை நீங்க சொல்லலைன்னு நான் நினைக்கறேன்..."

அதை அந்த சித்த சன்யாசியும் ரசித்தார். பின் சிரித்தபடியே பதில் கூறத் தொடங்கினார்.

"நூலைப் படிச்சா போறுமா... அதன்படி நடந்துக்கணும் இல்லையா?"

''அப்ப நான் நடந்துக்கலையா ஸ்வாமி? எனக்கு என் பெரியவா சொல்லிக் கொடுத்த அத்தனை ஆசார அனுஷ்டானங்களையும் நான் செய்யாம இல்லையே... என் செயல்கள்ள எனக்குத் தெரிஞ்சு பழுது

இந்திரா செளந்தர்ராஜன் 28

இருக்கறதாவும் தெரியலியே..."

"அப்படியா...? ஆமா ஆசாரம்கறது என்ன?"

"ஸ்வாமி... ஆசாரம்னா... ஆசாரம்னா... பக்திபூர்வமான செயல்பாட்டைத்தான் நான் ஆசாரம்னு நினைக்கறேன்."

"இதுவா தெளிவான பதில்? சாரம்னா என்ன முதல்ல அதுக்குப் பதிலைச் சொல்..."

"சாரம்னா... சாரம்னா... இல்ல ஸ்வாமி - நான் ஒண்ணு சொல்ல நீங்க ஒண்ணு சொல்ல... எதுக்குச் சங்கடம். நீங்களே சொல்லிடுங்கோ..."

"சாரம்கறதுக்கு இடத்துக்கு இடம் ஒரு அர்த்தம் உண்டு. கோவில்ல கோபுரமோ இல்ல நாம வசிக்க வீடோ கட்டும் போது சாரம் கட்டுவோம் இல்லியா?"

"ஆமாம்..."

"அப்படி சாரம் கட்டாம கோபுரத்தைக் கட்ட முடியுமா?"

"அது எப்படி முடியும்?"

"அதே மாதிரிதான் மனசுல ஆண்டவன் பேரால பக்திங்கற சாரம் கட்றோம். அதுக்குப்பேர்தான் ஆசாரம். இந்த ஆசாரம் உன்னுக்குள் ஸ்திரமான ஞான கோபுரத்தை எழுப்பத்தான். அந்தக் கோபுரம் எழும்பிடுத்துன்னா இதுக்கு வேலை கிடையாது. இதைப் பிரிச்சுடலாம்..."

"ஞானிகளுக்கு ஆசார அனுஷ்டானம் அவசியம் இல்லைங்கறேளா?"

"தேவைப்படாதுன்னு சொல்ல வரேன்... ஆசாரம்கறது ஒரு நிலையானதை அடையறதுக்கு உதவி செய்யற ஒரு தற்காலிகம். அதையே பெரிசா நினைச்சு அதுலயே நிக்கறது மூடம் இல்லையா?"

"அப்படின்னா?"

"ஆசாரத்துலயே நின்னுட்டே நீ... பக்தியுள்ள நெஞ்சுக்குள் நிறையவே தயையும், கருணையும் இருக்கும். அது ஒரு புழு பூச்சிக்கு எதாவது ஒண்ணுன்னாலும் கவலைப்படும்.

ஒரு ராஜா கூட கவலைப்பட்டான்... அவன் ஒண்ணும் உன்னை மாதிரி ஆசார அனுஷ்டானத்துல ஆழ்ந்து கிடந்தவன் இல்லை. அவனோட பிள்ளை ஒரு கன்னுக்குட்டி மேல தன் ரதத்தை ஏத்திக் கொன்னுட்டான். அந்தக் கன்னுக்குட்டியோட தாய்ப் பசு வந்து மணி அடிச்சு நீதி கேட்டுது. பதிலுக்குத் தன் பிள்ளையைத் தேர்க்கால்ல இட்டுக் கொல்ல அவன் தயாரானான்.

எப்பேர்ப்பட்ட செயல்?"

அந்த சித்த சன்யாசியின் கேள்வி சுற்றியுள்ள அவ்வளவு பேரையுமே ஆழ்ந்த கவனத்துக்கு உள்ளாக்கி விட்டது.

"ஸ்வாமி.. நீங்க இதைச் சொல்லும் போது தான் என் தப்பு எனக்குப் புரியறது. என் பிள்ளை கூட ஒரு வகைல அந்த ராஜாவோட பிள்ளை மாதிரிதான்... ஆனா நான்தான் அந்த ராஜா மாதிரி நடந்துக்கல. என்கிட்ட செயல்ல மூடம் இருக்கு... வாஸ்தவம்தான்!"

"புரிஞ்சா சரி... உன் பூஜையால கண்ணன் உன்னைப் பார்த்தான். ஆனா உன் செயலால தான் அவனை நீ பார்க்க முடியும். ஒருத்தன் இப்ப வெறும் செயலால மட்டுமே கண்ணனைப் பார்த்துண்டே இருக்கான். கண்ணனும் அவனுக்காக இப்ப அவன் சொல்ற வேலையை எல்லாம் செய்துக்கிட்டு இருக்கான்..!"

"ஸ்வாமி என்ன சொல்றேள் நீங்க... எனக்கு இந்த இடம் மட்டும் புரியலை."

"போகப் போக புரியும். தவறை உணர்ந்த நீ அந்த ராஜாமாதிரி உன் பிள்ளையைத் தண்டிக்க வேண்டாம். அதுக்காக மனசார வருத்தப்பட்டு கங்கைல போய் திரும்ப மூழ்கு...

இப்படிப்பட்ட பாவங்களைக் கரைக்கத்தான் பகீரதன் கங்கையைக் கொண்டு வந்தான். தம்பி... நீயும்தான்! போய்

"நகைக் கடையிலே ஏன் இவ்ளோ கமாண்டோக்கள் இருக்காங்க?"

"அந்தக் கடையில ரெண்டு கிராம் தங்கம் வாங்கறவங்களுக்கு வீடுவரை கமாண்டோ பாதுகாப்புத் தருவாங்களாம்!"

- பி.கே. பிரபாகர்



கங்கைல மூழ்கி எழு!

உன் முன்னோர்களோட பூஜாசக்திதான் நீ இங்க வரவே காரணம். நான் உங்ககிட்ட பேசவும் அதுதான் காரணம். இதெல்லாம் ஒரு கணக்கு. ரொம்ப ரொம்ப சூட்சுமமான கணக்கு.

லட்ச ரூபா சம்பளம், அதிகாரமான பதவி, கார்ல பயணம், ஏ.சி. அறை வாழ்க்கைங்கறதெல்லாம் இந்தக் கணக்கு முன்னால கண்டைக்கா! பதவி, அதிகாரத்தைக் கடவுள் ஒரு பரிசாத்தான் கொடுக்கறான். அப்படியே பரீட்சையும் ஆரம்பமாகுது. அந்தப் பரிசுக்காக சந்தோஷப்படலாம் தப்பு இல்ல... ஆனா அந்தப் பரிசுதான் பெரிசுன்னு நினைச்சா முக்திங்கற பெரிய பரிசு கிடைக்காம போயிடும். இந்தப் பூமிக்கு வந்துருக்கற கண்ணனை இப்ப உங்களால பாக்க முடியலையே... அப்படியும் ஆகிடும்."

அவர் இறுதியாகச் சொன்னது சீனுவைப் புரட்டி எடுத்தது.

சம்பத்தும் சாருவும் கூட அவர் பூடகமாகப் பேசுவதைப் புரிந்து கொண்டு விட்டனர்.

"ஸ்வாமி... கண்ணன் வந்துருக்கான்னு சொன்னேளே... நிஜமா ஸ்வாமி?" என்று சம்பத் மட்டும் வாயைத் திறந்தான்.

"அப்ப அவன் வர முடியாதவன்... வர மாட்டாதவன்கறதுதான் உன் அடிப்படையான அபிப்ராயமா?"

அவரது மடக்கலில் திணறத் தொடங்கினான்.

"இப்படி வரமுடியாத, வரமாட்டாதவனுக்காகவா இவ்வளவு நாள் உன் தகப்பனார் பூஜை செய்தார்?"

"இல்லை... நான் கேட்ட கேள்வியோட பொருளே வேற. எங்க பக்தி, செயல் இதுல பிழை இருக்கலாம். ஆனா ஒரு பிழையும் இல்லாத எத்தனையோ பாகவதாள் பத்தி கேள்விப்பட்டிருக்கேன். அவாளுக்குக் கூட அவன் தரிசனம் கிடைச்சதா தெரியல... அதான்!"

"தப்பு... கேள்வியே தப்பு... நீ சொன்ன மாதிரி பக்திக்கும் செயல்பாட்டுக்கும் கொஞ்சமும் இடைவெளி இல்லாத பாகவதாட்களுக்கு அவன் தரிசனம் கிடைச்சிருக்கு. அவங்க அதைச் சொல்லிப் பெருமைப்பட்டுக்கறத விரும்பாம இருந்துருக்கலாம். அது உனக்கு எப்படித் தெரியும்?"

"அப்ப அவன் வந்து போற பூமியா இப்படி ஒரே மேடும் பள்ளமுமா ஒரு பக்கம் தீவிரவாதம், இன்னொரு பக்கம் குண்டு வெடிப்புன்னும் இருக்கு...?"

"ஒரு மாளிகை சுத்தமா இருக்கணும்னா ஒரு மூலைல குப்பையைக் கூட்டி அள்ளத்தான் வேணும். தீவிரவாதம், குண்டு வெடிப்பு, சமாதானமில்லாத கொந்தளிப்புகள் எல்லாம் மனுஷ சமுதாயம் கோவிலுக்கு வந்து பிரார்த்தனைங்கற பேரால போடற குப்பைப்பா... அந்த எண்ண அலைகள்தான் பள்ளம் கண்ட இடத்துல பாயற வெள்ள நீர் மாதிரி, தப்பான தளம் உள்ள மனங்களுக்குள்ள புகுந்து நீ சொல்ற மாதிரி குண்டு வெடிப்பா சமாதானமின்மையா தெரியுது."

"இந்த விளக்கம் புதுசா இருக்கு... இதனால அப்பாவிகள் பாதிப்புக்குள்ளாகறாளே... அதைத்தானே தாங்க முடியல..."

"பாவி, அப்பாவிங்கறதுல்லாம் உன் பார்வை. ஆனா பூமியில காரணமில்லாம ஒரு காரியமில்லை. நூறு வயசாகி செத்தா அது நல்ல சாவு... பத்து வயசுல போனா அது கெட்ட சாவுங்கறது மனுஷன் ஆசாபாசங்களோட பேசற பேச்சு.

ஒரு ஞானிவரைல சாவுன்னா முடிவுன்னு மட்டும்தான் பொருள். இந்த உடம்பைச் சுமந்து இதுக்குத் தினம் சோறு



"மன்னரின் இணையதளம் பெயர் என்ன?"
"www.warrun.com"
- நாமக்கல் பாலு

போட்டு, இதோட பேச்சைக் கேட்டு ஆசா பாசங்களுக்கு அடிமையாகி நூறு வருஷம் ஆசைகளோட அலைபாயறதுதான் உண்மைல பாரமான விஷயம். சீக்கிரம் போய்ச் சேர்றதுங்கறதுதான் சுகமான விஷயம்."

"அப்ப பதினாறு பேறுகள்ள தீர்க்க ஆயுளை ஒரு பெரும் பேறா குறிப்பிடக் காரணம்?"

"தம்பி... உன் கேள்விகளுக்கு இன்னொரு சமயம் பதில் சொல்வேன். என் வரைல உனக்குச் சொல்ல வேண்டியதைச் சொல்லிட்டேன். சொல்லும் செயலும் ஒண்ணா இருந்தா கிருஷ்ண தரிசனம் நிச்சயம். இதைப் புரிஞ்சுக்கோ... உனக்கு இன்னமும் நிறைய அனுபவங்கள் பாக்கி இருக்கு.

போ... ஓடிப்போன கண்ணனைத் தேடிப் பிடி. நீ அந்தக் கண்ணனோட இங்க வரும்போது இங்கேயும் ஒரு கண்ணன் வந்துருப்பான்."

அவர் ஆசீர்வதிப்பதுபோல கைகளை உயர்த்தியபடியே பேசிவிட்டு அங்கிருந்து அடுத்தடுத்து நகரத் தொடங்கி விட்டார்.

சீனுவிடம் ஒரு அசாத்ய மௌனம்!

அவர் வரையில் அவர் மனது அந்த சித்த சன்யாசி சொல்லியிருந்த தோர்க்கால் சோழன் கதையில் சிக்கியிருந்தது. மொத்த பூஜையும் விரயமாகிவிட்டது போல கூட அவருக்குள் ஒரு உள்ளுணர்வு.

"சரி... சாரு நீ இங்க இரு! நான் இப்பவே கிளம்பறேன்..." என்று துரித மானவனைத் தடுத்த ராஜம், "முதல்ல கங்கைல போய் ஸ்னானம் பண்ணி பெருமாளை சேவிச்சுட்டு வா. அப்புறமா கிளம்பலாம். ஏன்னா... காசில கண்ணனுக்கு ஒண்ணும் குறையில்ல. அந்தக் கணேஷ் திவ்யமா பூஜை பண்ணிண்டு தான் இருக்கான்..." - என்றாள்.

அவர்களும் மறுபேச்சுப் பேசாமல் கங்கைக் கரை நோக்கிப் புறப்பட்டனர்.

(தொடரும்)



# "நான் படிக்காதவன்!"

ஆயிரம் சேவாக்குகளும் டோனிகளும் முளைத்தாலும் மக்கள் கபில் தேவை மறக்கவே யில்லை. 'ஸ்போர்ட்ஸ் ஸ்டார்' பத்திரிக்கையின் தொடக்க விழாவுக்கு ஹரியானா சிங்கம் நுழைந்தபோது செம வரவேற்பு. பி.டி. உஷா, ரமேஷ் கிருஷ்ணன், வெங்கட் ராகவன், பாலாஜி, ராபின் சிங்... போன்ற பிரபல விளையாட்டு வீரர்களும் சென்னையின் வி.வி.ஐ.பி.களும் கலந்து கொண்ட விழாவின் மையப் புள்ளியே தி ஒன் அண்ட் ஒன்லி கபில்தான்.

"விளையாட்டு வீரர்களின் ஒவ்வொரு சாதனையையும் பத்திரிகைகள் பாதுகாத்து வைப்பது உணர்வுப்பூர்வமானது. நான் பள்ளி நாட்களில் பாடப் புத்தகங்களைவிட விளையாட்டுப் புத்தகங்களையே அதிகம் வைத்திருப்பேன். அதனால்தான் படிப்பும் சரியாக ஏறவில்லை'' என்று கபில் கண்ணடிக்க அரங்கம் ரசித்தது.

கிரிக்கெட்டைப் பற்றி இந்நாள் விளையாட்டு வீரர்கள் பேசுவதை விட முன்னாள்கள்தான் நிறைய பேசுகின்றனர். கபிலும் பாகிஸ்தான் தொடர் பற்றி நிறைய பகிர்ந்து கொண்டார்.

"மேன் ஆஃப் தி சீரியஸ் விருதை பிட்ச் கியூரேட்டருக்குக் கொடுப்பேன் (ஆஹா). ஒரு நல்ல சீரியஸை இப்படிக் கெடுத்திருக்க வேண்டாம். அப்புறம் கங்கூலி பற்றி நிறைய பேசியாச்சு. பத்து வருடங்கள் சர்வதேச கிரிக்கெட் ஆடிய ஒரு பிளேயருக்கு, தான் எப்போது ரிட்டையர் ஆக வேண்டும் என்று தெரிந்திருக்க வேண்டும்" என்றவர் திடீரென டோனிக்குக் கொடி பிடிக்கத் தொடங்கினார். ''என்னுடைய ஹீரோ என்றால் அது டோனிதான். சவால்களை எளிமையாக எதிர் கொள்கிறார். அவருடைய ஆட்டத்துக்கு ரசிகனாகிவிட்டேன்'' என்றார்.



• பி.டி.உஷா

பி.டி. உஷா, கேரளாவில்தான் புதிதாக ஆரம்பித்திருக்கும் அகடமி பற்றிச் சொன்னார். "நான் ஒலிம்பிக்ல மெடல் வாங்கலைன்னா என்ன, என் அகடமியில நிறைய ஒலிம்பிக் மெடல் வீரர்களை உருவாக்குவேன்'' என்றார்.

உடல் இளைத்து மெருகேறி ஸ்மார்ட்டாக இருந்தார் பாலாஜி. விடுவார்களா இளம் பெண்கள்! ஆட்டோகிராப் வாங்குகிற சாக்கில் வளைத்துக் கொண்டனர்.

**- செந்தில்**

படங்கள் : **ஓம்**

# பென்குயின் மாநாடு!

(இணையம் மற்றும் தகவல் தொழில் நுட்ப உலகில் முக்கிய நிகழ்வுகளைச் சொல்லும் பகுதி)

## குட்டி ஒபேரா!

பத்து விரல்களால் மெயில் செக் பண்ணுவதற்குப் பதில் கையின் பெருவிரலால் மொபைலிலேயே மெயில் செக் பண்ணிக் கொள்ளும் காலம் இது. எல்லா நிறுவனங்களும் போட்டி போட்டுக் கொண்டு மொபைல் போன்களுக்கான ப்ரௌஸர்களை அறிமுகப்படுத்தும் காலமிது. ஒபேராவும் மொபைல்களுக்கான மினி ப்ரௌஸரோடு களமிறங்கியுள்ளது. WAP வசதியுள்ள மொபைல் மூலம் இலவசமாக டௌன்லோட் செய்து கொள்ளலாம். இந்த மினி ப்ரௌஸரின் முகப்புப் பக்கம் கூகுல் ஸர்ச் வசதி கொண்டது. ஆங்கிலம், ப்ரெஞ்ச், ரஷ்யன், ஜெர்மன்



உள்பட பத்து மொழிகளில் கிடைக்கும் ஒபேரா மினி ப்ரௌஸர் ஜாவா வசதியுள்ள மொபைல் போன்களில் இயங்கும்.

## பென்குயின் மாநாடு!

விண்டோஸ்தான் ஒரே ஈஸியான ஆபரேட்டிங் சிஸ்டம் என பெரும்பாலான மக்கள் நம்பிக் கொண்டிருக்க, நாங்களும் 'யூஸர் ப்ரெண்ட்லி தாம்பா, அதைப் புரிஞ்சுக்கோங்க' என லினக்ஸ் தன்னை நிரூபிக்க பாடுபட்டு வருகிறது. லினக்ஸ் ஆசியா மாநாடு 2006, வரும் பிப்ரவரி 8 - 10 தேதிகளில் புதுடெல்லியில் நடைபெற இருக்கிறது. லினக்ஸ் ஆபரேட்டிங் சிஸ்டத்தை, நிறுவனங்கள் தவிர தனி நபர்களிடத்தும் பரப்புவது, மைக்ரோசாஃப்ட் ஆபீஸ் உபயோகிப்பவர்களை லினக்ஸின் ஓப்பன் ஆபிஸ் பற்றி அறிந்து கொள்ள வைப்பது, பல்வேறு துறைகளைச் சார்ந்த பெரிய நிறுவனங்களை லினக்ஸின் பக்கம் இழுப்பது போன்றவை இந்த மாநாட்டின் முக்கிய நோக்கமாகும். ஐ.பி.எம், ஆரக்கிள், ஹெச்பி, டெல், இன்டெல், ரெட்ஹேட் என பல ஜாம்பவான்கள் ஸ்பான்ஸர் செய்ய தூள் கிளப்பப் போகுது பென்குயின் மாநாடு.



● ஜெஃப் பிஸோஸ்

## ஆரஞ்சு அழகு!

புதுசா ஒண்ணு வந்திருக்கு பாருங்க. பளபளா ஐவரி கலர் உடம்பு, பச்சக்னு பத்திக்கிற ஆரஞ்சு கலர் டிஸ்ப்ளே, படக் படக் கேமரா கண், துல்லியமா ரம்மியமா இசையை ரசிக்க வாக்மேன், எஃப்.எம். என்னா அழகு தெரியுமா! சோனி

எரிக்ஸன் அறிமுகப்படுத்தியுள்ள W800i வாக்மேன் போன் தான் இப்போது மொபைல் உலகின் டாக். மிகத் துல்லிய மான ஆடியோ, தரமான இயர்போன், 2.0 மெகா பிக்சல் கேமரா, ப்ளூ டூத், 30 மணி நேரம் தாங்கக் கூடிய பேட்டரி யுடன் (விலை: ரூ22,500) அறிமுகமாகி யுள்ள இந்த சகலகலா மொபைலுடன் 512MB மெமரி ஸ்டிக்கும் உண்டு. இந்த மொபைலின் மைனஸ் என்றால் இத னுடன் போட்டோக்களை டௌன் லோட் செய்ய கொடுக்கப்பட்டுள்ள USB



போர்ட் தான். அதற்கென தனியாக டிரைவரை விண்டோஸில் இன்ஸ்டால் செய்ய வேண்டியதுள்ளது.

### வாய்ஸ் ப்ளேயர்:

ஜெஃப் பிஸோஸ் : அமேசான்.காம் நிறுவனர். 'தினமும் நமது வாடிக்கை யாளர்களை நாம் ஏற்பாடு செய்திருக்கும் பார்ட்டிக்கு வந்திருக்கும் விருந்தினர் களைப் போல் எண்ண வேண்டும். அவர் களை ஒவ்வொரு நாளும் முந்தைய நாளைவிட சிறிது அதிகம் திருப்திபடுத்த வேண்டும்.

- முகில்



## பேய்ப் பனை!

தன்னைப் பார்க்க
அறவே பிடிக்கவில்லை
ஊர்க்கோடி
ஒற்றைப் பனைக்கு

காய்ந்து சரிந்த
பாளைகள்,
உயிர்ப்பின்
கடைசி எச்சமென
துளிப்பச்சையுடன்
நுனி உடைந்த குருத்து

பார்வை எட்டிய தூரம்வரை
மனித நடமாட்டம் அற்ற
காய்ந்து வெடித்த
வயல் வெளிகள்

மனிதர்கள் என்றோ
தன்மேல் அறைந்த
ஆணிகளின் கோரப் பற்களின்
நீண்ட நிழல்களும்
ஒரு சேர அச்சுறுத்த
நடுங்கியபடி இருந்தது
தனிமையில் அந்த பேய்ப்பனை

பிரேமபிரபா

**தே**ர்தல் ஜுரம் நூறு டிகிரியைத் தாண்டி கொதித்துக் கொண்டிருக்கிறது ராயபுரத்தில். கூட்டணிக் கூத்துகள் அரங்கேறுவதற்கு முன்னரே விளம்பரத்துக்குச் சுவர் பிடிப்பது, பூத் கமிட்டி அமைப்பது, மிச்ச சொச்ச பணிகளை விரைந்து செய்வது என்று தேர்தல் வேலைகள் களைகட்டத் துவங்கிவிட்டன. மீன் வாசம் கமழும் இந்த அமைச்சர் தொகுதிக்குள் நாம் ரவுண்ட் அப் செய்வதற்கு முன் சின்ன ஆட்டோகிராஃப்.

கடந்த சட்டமன்ற தேர்தலில் இந்தத் தொகுதியில் மொத்தம் 1,56,538 வாக்காளர்கள் இருந்தனர். ஆனால் பதிவானதோ வெறும் 78,335 வாக்குகளே. ஜெயக்குமார் பெற்ற வாக்குகள் 44,465. அவரை எதிர்த்துப் போட்டியிட்ட தி.மு.க.வின் நற்குணன் பெற்ற வாக்குகள் 30,753.

**நா**ம் தொகுதி ரவுண்ட் அப்புக்குச் சென்ற நேரம் அமைச்சர் ஜெயக்குமாரும் தொகுதிக்குள் மக்களைச் சந்தித்துக் கொண்டிருக்கிறார் என்று தகவல் வரவே, அவருக்குத் தெரியாமல் பின் தொடர்ந்தோம்.

"தம்பி.. காவா அடைச்சுக்கிட்டுப்பா... என்னன்னு பார்க்கச் சொல்லேன்"

"அண்ணே... கழிப்பறை கட்டி ரொம்ப நாளாச்சு... அதத் தொறக்கறதுக்கு ஒரு வழி பண்ணுண்ணே" என்று தொகுதி மக்கள் அமைச்சரை உரிமையுடன் கேட்க, அவரும் "எந்த இடம்... ஏன் இன்னும் சரிபண்ணல" என்று சம்பந்தப்பட்ட இடத்துக்குச் சென்று, அதிகாரிகளுக்குத் தேவையான உத்தரவுகளை வழங்கிவிட்டு, அடுத்தடுத்த இடங்களுக்குச் செல்லத் தொடங்கினார்.

* மனோ



அப்போதே நாமும் தொகுதி மக்கள், கட்சிக்காரர்கள், டீக்கடை பெஞ்சு, திண்ணைக் கச்சேரி என்று ஒவ்வொரு இடத்தையும் ஏறி இறங்கிப் பார்த்து மக்களின் பல்ஸை செக் பண்ணியபடியே வந்தோம்.

"ஆர்.எஸ்.ஆர்.எம். பிரசவ ஆஸ்பத்திரிக்கு வருவதற்கு

# ஜெயிப்பாரா ஜெயக்குமார்..?

## பரபரக்கும் ராயபுரம்!

இருக்கும் இடையூறைப் போக்க சுரங்கப் பாதை மாதிரியான ஒரு ஏற்பாடு தேவை. தொகுதி மக்களின் நீண்ட நாள் கோரிக்கையான இதைச் செய்து தர்றேன்னு சொல்லி, வோட்டுக் கேட்டு ஜெயிச்சார் அமைச்சர். ஆனால் இப்போது ஆட்சியே முடிவடைய இருக்கிறது. இந்தப் பணி மட்டும் அப்படியே கிணற்றில் போட்ட கல்லாக இருக்கிறது'' என்று சூடாக ஆரம்பித்த தொகுதியின் காங்கிரஸ் பிரமுகரான ராயபுரம் மனோ, ''கட்சியின் முக்கியப் புள்ளி - சக்திவாய்ந்த அமைச்சர் என்கிற முறையில் அவரிடமிருந்து மக்கள் நிறைய எதிர்பார்த்தனர். ஆனால் அவரோ இந்தத் தொகுதிக்கான ஒரு புதிய திட்டத்தைக் கூடக் கொண்டுவரவில்லை. குறிப்பாக கன்டெய்னர் லாரிகளால் இங்கு நிலவும் போக்குவரத்துச் சிக்கலுக்கு இன்னும் விடிவு கிடைக்கவில்லை'' என்று சூடு குறையா மல் பேசிக்கொண்டே இருந்தார்.

ஆனால் நாம் சந்தித்த தொகுதிவாசிகள் பலருடைய பேச்சும் அமைச்சருக்கு ஆதரவான தாகவே இருந்தது.

''அமைச்சர் எங்க ஊருக்கு ஏகப்பட்ட நல்லது செய்திருக்காரு. நேரா எங்க வீட்டுக்கே வந்து என்ன... ஏதுன்னு விசாரிக்கறாரு. சுனாமி வந்தப்போ எல்லா வீட்டுக்கும் பணம் கிடைக்க ஏற்பாடு பண்ணினாரு. அதேபோல இப்போ



* குப்பன்



* திரவியம்



* மதிவாணன்

# ராயபுரம்
# தொகுதி விஸிட் 3





* பலராமன்



* வளர்மதி

மழை வந்து அடிச்சுக்கிட்டு போனப்போ நேர்ல வந்து பார்த்து துட்டுல்லாம் குடுத்துட்டுப் போனாரு" என்கிறார் குடும்பத் தலைவியான வளர்மதி.

"சாலை வசதி - கழிப்பிட வசதி - குடிநீர் வசதி என்று அத்தியாவசிய வசதிகள் நிறைந்துள்ள தொகுதி என்றால் அது ராயபுரம்தான்" என்கிறார் ஏரியா கவுன்சிலரான குப்பன்.

"அமைச்சர் இந்தத் தொகுதிவாசியாக இருப்பதால் இங்குள்ள அனைத்துப் பிரச்னைகளும் அவருக்கு அத்துப்படி... நீண்டகாலமாகப் பயன்படுத்தப்பட்டு மோசமான நிலைமையில் இருக்கும் மீனவர் குடியிருப்புகளைப் புதுப்பித்துத் தரும் பணி அமைச்சரால் மேற்கொள்ளப்பட்டுள்ளது. எல்லாவற்றையும் தாண்டி பொதுமக்களின் குறைகளை உரிமையுடன் சென்று அவரிடம் நேரில் கேட்க வாய்ப்புகள் அதிகம்" என்கிறார் குப்பன்.

அமைச்சர் கடந்த நான்கு வருடங்களாகத் தொகுதியை எட்டிக் கூடப் பார்க்கவில்லை என்கிறார் தி.மு.க. முன்னாள் எம்.எல்.ஏ. மதிவாணன்.

"மீனவமக்கள் அதிகம் வாழும் இந்தத் தொகுதியில் கலைஞர் ஆட்சியில் தொடர்ந்து ஐந்து ஆண்டுகள் டீசல் மானியம் கிடைக்க ஏற்பாடு செய்தோம். ஆனால் இந்த ஆட்சியில் முதல் மூன்று ஆண்டுகள் இந்த மானியத்தைத் தராமல், தேர்தலை மனத்தில் வைத்து, நான்காவது ஆண்டு மட்டும் தந்தார்கள். இது மக்களிடையே கடுமையான அதிருப்தியை ஏற்படுத்தியுள்ளது. அதேபோன்று தி.மு.க. ஆட்சியில், வெளிமாநிலத்திலிருந்து வரும் மீன்கள் விற்பனையை சென்னையில் தடை செய்திருந்தோம். ஆனால் இந்த வியாபாரம் இப்போது தங்கு தடையின்றி நடந்து வருகிறது. இதனால் தொழில்ரீதியாக இங்குள்ள மீன் வியாபாரிகள் கடுமையாகப் பாதிக்கப்பட்டுள்ளனர். இதனால் அமைச்சர்மீது கடுமையான கோபத்தில் இருக்கின்றனர் பொதுமக்கள்" என்கிறார் மதிவாணன்.

வழியில் ஒரு மூட்டை தூக்கும் தொழிலாளி பெயர் பலராமன். வலது கரத்தில் உதயசூரியன் பச்சை குத்தப்பட்டு எம்.ஜி.ஆர். என்று ஆங்கிலத்தில் எழுதப்பட்டிருந்தது. இந்தக் குழப்ப மனிதரிடம் பேசினோம்.

"அதுவா தம்பி... அது தலைவரு தி.முக.வுல இருந்தப்போ குத்தினது. ஆனால் நான் இரட்டை இலைக்குத்தான் வோட்டுப் போடுவேன். எங்க அமைச்சருக்குத் தொகுதிக்குள்ள நல்ல பேரு பொதுவாவே ஜாஸ்தி. இதுல அஞ்சு வருஷம் மந்திரியாவே இருந்துட்டாரு. அதனால அவர்தான் ஜெயிப்பார்னு நினைக்கிறேன்..." என்கிறார் பலராமன்.

ராயபுரம் ஏரியாவில் வியாபாரம் செய்து வருகிறார் திரவியம். இவர் மாவட்ட காங்கிரஸ் பிரமுகரும் கூட. அவருடைய பேச்சு சற்று வித்தியாசமாக இருக்கிறது.

"பணிகள் நடந்திருக்குதோ, இல்லியோ அவருக்கு ஒரு நல்ல பேர் இருக்கு. அதை இதுவரைக்கும் அவரு கெடுத்துக்கல. அதேபோல பூத் கேப்சரிங் மாதிரி அராஜகம் பண்ற ஆளும் இல்ல. அதனால மக்கள் மத்தியில நல்ல மதிப்பு இருக்கு. ஆனா என்ன

இருந்து என்ன பலன். எங்க கூட்டணி வலுவா இருக்கு. அதனால அவரு ஜெயிக்கறது அவ்வளவு ஈஸி இல்ல. இந்தத் தொகுதியில் எங்கள் கூட்டணியைச் சேர்ந்த மாநில, மாவட்ட அளவிலான நிர்வாகிகள், பிரமுகர்கள் அதிகம் இருக்கின்றனர். ஆகவே இந்தத் தொகுதியில் தி.மு.க. கூட்டணியின் வெற்றி உறுதி" என்கிறார்.

தொகுதியில் அமைச்சர் ஜெயக்குமாருக்கு நல்லமதிப்பும், ஊர்க்காரர் ஜெயித்தால் மீண்டும் அமைச்சர் ஆவார் என்கிற எண்ணமும் மேலோங்கியிருக்கின்றன. அ.தி.மு.க. சார்பில் ஜெயக்குமாரே களமிறங்கினால் ஏறக்குறைய வெற்றி உறுதி என்கிற நிலையில், மாற்று முகாமில் தி.மு.க. சார்பாக போட்டியிட ஒரு பட்டியலே இருக்கிறது. அவர்களுள் முன்னாள் எம்.எல்.ஏ. மதிவாணன், நற்குணன், சேகர், இளைய அருணா என்று நான்கு பேரும், காங்கிரசுக்கு ஒதுக்கப்பட்டால் ராயபுரம் மனோ - வாசன் சார்பாகவும், திரவியம் - இளங்கோவன் சார்பாகவும் களத்தில் குதிக்க காத்திருக்கின்றனர். இந்தப் பட்டியலின் நீளமே எதிரணியின் பலமும்கூட!

- இரா.முத்துக்குமார்
படங்கள் : ராஜன்

## "எல்லாமே அம்மாதான்!"

"தொகுதிக்குள் சென்று பாருங்கள். எந்த அளவுக்கு மக்கள் புன்னகையுடன் இருக்கிறார்கள் என்று தெரியும். இவை அனைத்துமே அம்மா எனக்குக் கொடுத்த வாய்ப்பும், அம்மாவின் செயல்பாடுகளும் தான். இந்த ஆட்சியில் மட்டும் தெரு விளக்குகள், மழைநீர்க் கால்வாய், குடிநீர் வசதி உள்ளிட்ட அத்தியாவசியப் பணிகளுக்காக பெருமளவில் நிதி ஒதுக்கப்பட்டு திட்டங்கள் செயல் வடிவம் பெற்றுள்ளன. இதன் காரணமாக அடிப்படைத் தேவைகளில் ஒரு முழு நிறைவு பெற்ற தொகுதியாக ராயபுரம் இருக்கிறது. ராயபுரத்தில் கிட்டத்தட்ட ஏழாயிரம் மரக்கன்றுகள் தொலை நோக்குப் பார்வையுடன் நடப்பட்டுள்ளன. இதன் மூலம் விரைவில் ராயபுரம் தமிழகத்தின் குளுகுளு தொகுதியாக மாறப் போகிறது. இந்தத் தொகுதியின் மிக முக்கியப் பிரச்னையான கன்டெய்னர் லாரிகளால் ஏற்படும் போக்குவரத்துச் சிக்கலை சரி செய்ய இருபது கோடி ரூபாய் செலவில் தமிழ்நாடு ரோட் டெவலப்மெண்ட் கார்ப்பரேஷன் மூலம் பணிகள் துவங்க உள்ளன. அது மட்டுமின்றி இரும்புத் துகள்கள் மற்றும் சுண்ணாம்புத்துகள்கள் மூலம் அவஸ்தைப் படும் இந்தத் தொகுதிக்கு தமிழக அரசின் கடுமையான முயற்சிகளால் விரைவில் தீர்வு ஏற்பட உள்ளது. மீன்பிடித் துறைமுக அபிவிருத்திக்காக பத்துக்கோடி ரூபாய் நிதி ஒதுக்கீடு செய்யப்பட்டு செயல் வடிவம் பெற்றுக் கொண்டிருக்கின்றது. அதே போல ஸ்டான்லி அருகே சுரங்கப்பாதை அமைக்கும் பணிக்கு ஒன்பது கோடி ரூபாய் நிதி ஒதுக்கப்பட்டும், மத்திய அரசின் அனுமதி வழங்கப்படாததால் அந்தப் பணி தடைப்பட்டுள்ளது. ஆகவே ஒரு எம்.எல்.ஏ. என்கிற முறையில் எனது தொகுதியை நான் நன்றாகவே வைத்திருக்கிறேன். தொகுதி மக்களும் என்மீது திருப்தியாகவே இருக்கின்றனர்" என்றார் ஜெயக்குமார். "உங்களுக்கு வெற்றி வாய்ப்பு..." என்று முடிப்பதற்குள் "எல்லாம் அம்மாதான்" என்று கூறிவிட்டுக் கிளம்பினார். ●

* தொகுதி மக்களுடன்...



உண்மையில் நான் ரிடையராகி கிட்டத்தட்ட ஒரு மாதமாகிறது காஞ்சிபுரத்திலிருந்து அன்றிரவு பஸ்ஸில் திரும்பிக் கொண்டிருந்த போது எனக்கு முன் பின் தெரியாத பக்கத்து சீட் ஆசாமி "ஸார் எங்கே ஒர்க் பண்றீங்க?" என்ற கேள்விக்கு நியாயமாக 'நான் ரிடையராகி ஒரு மாதமாச்சு' என்பதுதான் என் பதிலாக இருந்திருக்க வேண்டும்.

மாறாக 'எஜுகேஷன் டிபார்ட்மெண்டில் டெபுடி டைரக்டராக இருக்கேன்' என்று காலரைத் தூக்கி விட்டுக் கொள்ளாத குறையாக அந்த யாரோ ஒரு ஆசாமியிடம் பெருமையாகச் சொல்லிக் கொள்ளவே என் மனம் இசைந்தது. நான் உயர் பதவியில் இருந்ததோ அல்லது இப்பொழுது ஓய்வு பெற்றதோ, எந்த ஒரு தகவலும் அந்த அறிமுகமில்லாத நபரின் மனத்தில் என்னைப் பற்றிய அபிப்ராயத்துக்கு எந்த ஒரு குந்தகமும் விளைவிக்கப்போவதில்லை. இருந்தாலும் ஒரு மாதம் முன்பு வரை இருந்த பெருமைக்குரிய அடையாளத்தை போலியாகத் தக்கவைத்துக் கொள்ளும் ஆசை என்னை விடவில்லை.

முப்பத்து மூன்றாண்டுகளாக வெவ்வேறு பதவிகளிலிருந்து அரசாங்கத்தின் ஒரு மேல்நிலை பதவியில் பொறுப்பான உத்யோகத்தை வகித்த போதெல்லாம் கூட இப்படி யாராவது எங்கே வேலை செய்கிறீர்களென்று கேட்டிருக்கிறார்கள். அப்போதெல்லாம் சொன்ன உண்மையான பதிலிலும் கூட அதை ஒரு பெருமையாக என் மனம் கொண்டாடிய இல்லை. ஏனோ இயல்பாக ஓய்வு பெற்றதை இவ்வுலகத்துக்குச் சொல்வதில் எனக்கொரு தயக்கம் இருந்தது.

வீட்டுக்குக் கொண்டு வந்து விட்டு அழைத்துப்போக அரசாங்க ஜீப், ஒரு தொலைபேசி, டூர் என்று சென்று விட்டால் அங்கங்கே கிடைக்கும் மரியாதை என அனுபவித்தபோது கூட அதையெல்லாம் ஒரு அலட்சிய மனோபாவத்தோடுதான் ஏற்றுக் கொண்டிருக்கிறேன்.

திடுதிப்பென்று ஒரு நாள் மாலையும், சால்வையுமாக என் ஜீப் என்னை வீட்டுக்குக் கொண்டு விட்டுச் சென்று விட்டது. போகும் ஜீப்பை ஏக்கத்தோடு பார்த்துக் கொண்டு நின்றேன். பதவி, பெருமை, மட்டு, மரியாதை எல்லாமே அந்த ஜீப்பில் எனக்கு டாடா காண்பித்துக் கொண்டு செல்வதாக உணர்ந்தேன்.

அடுத்த ஒரு வாரம் பென்ஷன், கிராஜுவிடி போன்றவற்றுக்காக எல்லா அரசாங்க ஊழியனுக்கும் கிடைக்கும் அலைக்கழிப்பு அனுபவம் எனக்கும் இருந்ததால் அந்த ஏழு நாட்கள் என் மனத்தில் ஓய்வு பெற்ற பாதிப்பு இல்லை. பத்து நாட்களுக்குப்பின் ஒரு பகல் நேரத்தில் வெளியே செல்லும் ஒரு வேலை இருந்தது. அபார்ட்மெண்டின் மெயின் கேட் அருகே சென்றபோது வாட்ச்மேன்தான் அந்தத் தாக்கத்தை உணரச் செய்யும் கேள்வியை ஆரம்பித்து வைத்தான்.

“ஏன் ஸார் நடந்து போறீங்க? ஜீப் வரலையா?” என்றவனிடம், சட் டென்று நான் ரிடையராகிவிட்டதை தான் சொல்லியிருக்க வேண்டு ஆனால் “ஊஹூம்” என்று தலையை மட்டும் ஆட்டிவிட்டு வேகமா நகர்ந்துவிட்டேன். என் மன இன்னும் ஜீரணிக்கவில்லை எ

# அடையாளம்

புரியத் தொடங்கியது.

இன்னொரு நாள் மதியம் மூன்று மணி இருக்கும். தாம்பரத்திலிருந்து பஸ்ஸில் திரும்பிக் கொண்டிருந்தேன்.

"என்ன ஸார் இன்னிக்கு லீவா?" என்று கேட்டபடி எங்கள் அபார்ட்மெண்ட் அஸோஸியேஷன் செகரட்டரி அருகே வந்து நிற்க, அவருக்கு என்ன பதில் சொல்வதென்று சற்றே மனம் தடுமாறியது. 'இல்லே இனிமே எப்பவும் லீவ்தான்' சொல்லிவிட ஒரு பெரிய தயக்கம் இருந்தது. பஸ் இரைச்சலில் அவருடைய கேள்வியை காதில் வாங்கிக்

அகிலா கார்த்திகேயன்

கொள்ளாதவன் போல் அவரிடம் வெவ்வேறு விஷயங்களைப் பேசிக் கொண்டே வந்தேன். பஸ்ஸை விட்டு இறங்கி இருவரும் பிரியும்வரை சமாளித்தும் அவர் விடாப்பிடியாக "என்ன இன்னிக்கு ஸார் ஆபீஸ் போகல போலிருக்கு" என்றபடி என் முகத்தைப் பார்த்தார். அப்போதும் அது காதில் விழாதவன் போல் "சரி, அப்புறம் பார்க்கலாம்" என்று அவரிடமிருந்து தப்பித்துக் கொண்டு ஓடுவதுபோல நழுவினேன்.

நான் இப்படி நடந்து கொள்வதைப் பற்றி என்னை நானே அலசிக் கொள்ளாமலில்லை. நரைத்த தலையோடு வீட்டில் பகல் நேர சீரியலும் கிளாஸிக் மேட்னியும் பார்த்து காலத்தைத் தள்ளும் கிழ லிஸ்ட்டில் சேர மனம் விழையவில்லையோ; சமூக அந்தஸ்து போய்விடுமோ என்ற பயத்தினால் யதார்த்தத்தை ஏற்க மனம் தயங்குகிறதோ தெரியவில்லை. "ஸார், நான் ரிடையர் ஆயிட்டேன்" என்று துணிவோடு சொல்லும் மனப் பக்குவம் இப்போது வராது போலிருந்தது.

'ஓ' பிளாக் வசுமதி, 'சி' பிளாக் சுந்தரராஜன் என்று நாலைந்து பேர் நடுப்பகல் நேரத்தில் என்னைப் பார்த்து விட்டு லீவா, ஆபீஸ் போகலையா, என வெவ்வேறு தருணங்களில் தர்ம சங்கடத்துக்குள் ஆழ்த்தியிருந்தாலும் யாரிடமும் இழந்திருந்த அடையாளத்தைக் காட்டிக் கொள்ளாமல் சாமர்த்தியமாகத் தப்பித்துக் கொண்டிருந்தேன்.

மகளுடைய ஜாதகத்தை கூரியரில் அனுப்ப இன்று பகலில் தெருமுனைக்குப் போகவேண்டியதாயிற்று. யார் கண்ணிலும் படாமல் விறுவிறுவென்று அபார்ட்மெண்ட் வாயில் வரை வந்தாயிற்று. மெயின்கேட் அருகே அஸோஸியேஷன் ஆபீஸைக் கடந்தபோது யாரோ என் பெயரைக் குறிப்பிட்டுப் பேசுவது காதில் விழுந்தது.

"ஆமாம்... எனக்கும் சந்தேகமாகத்தான் இருக்கு ஸார். இரண்டு மூன்று தரம் அவரைப் பார்த்தேன்.. லீவான்னு கேட்டா சரியா பதில் சொல்லலை கொஞ்ச நாளா ஜீப்பும் வரலேன்னு வாட்ச்மேன் சொல்றான். அன்னிக்கு அட்டெஸ்டேஷன் வாங்க நம்ம சீனிவாசனோட பையன் போயிருக்கான்... எப்பவும் போட்டுக் குடுத்துடுவாராம், ஆனா இப்போ 'சில்' ஆபிஸிலே இருக்கு போட முடியாதுன்னு என்னமோ மழுப்பியிருக்காரு... பாவம் என்ன ஆச்சோ... நீங்க நினைக்கிறமாதிரிதான் எனக்கும் ஒரு வேளை சஸ்பெண்ட் ஆயிருப்பாரோன்னு தோணுது..."

பேசிக் கொண்டிருப்பது யாரென்று தெரியவில்லை. ஆனால் அது சாட்சாத் என்னைப் பற்றிதான் என்று தெளிவாகப் புரிந்தது. 'அடப்பாவிகளா! நான் சஸ்பெண்ட் ஆகிவிட்டேனென்று அபத்தமாக நினைப்பீர்கள். அட, இது என்ன கேவலம்?'

இதைவிட 'நான் ரிடையர் ஆயிட்டேன்' என்று என் உண்மையான அடையாளத்தை இப்பொழுது எல்லோரிடமும் பறை சாற்றுவதில் என் மனம் பெருமைப் படும் போலிருந்ததை முதல் முறையாக உணர்ந்தேன். ○

"இட்லி பூப்போல இருக்குதே?"
"அதுக்குச் சந்தோஷப்படாமல் ஏன் சார் இப்படிக் கவலைப்படுறீங்க?"
"இல்லை... சாப்பிட்டப்புறம் நானும் இவ்வளவு நைஸா மாவரைக்கணுமே!"

- எம். அசோக்ராஜா



# சின்னான்(டெக்னாலஜி) செய்திகள்

**மை**க் செட்டு, குழாய், கவரு, வெளம்பரம், சின்னம், முத்திரை, பெட்டி, பிளாஸ்டிக் குடம், நூறு ரூபா, பிளாஸ்டிக் கொடி... இன்னா சொல்ல வாரேன்னு உங்களுக்குச் சொல்லாமலே விலாவாரியா புரிஞ்சிருக்குமே! 'ஏ அப்பு. கள்ள வோட்டு கோஷ்டிக்கெல்லாம் நாங்க வைக்கப் போறோம் ஆப்பு'ன்னு சவால் விட்டு உறுதி கூறி களத்தில இறங்கியிருக்குது தேர்தல் கமிஷன். புதுசா இன்னா மேட்டருன்னு கேட்கறீங்களா? ஏதோ ஆண்டி-கள்ள வோட்டு சாஃப்ட்வேர் கொண்டு வந்திருக்காங்களாம். ஒரே பெயரு, அதையொட்டிய விவரம் ரெண்டு மூணு இடங்களில் இருந்தா, ஒரு பெயரைத் தவிர மத்த பெயர்களையெல்லாம் விஸ்ட்ல இருந்து தூக்கிருமாம் அந்த சாஃப்ட்வேர். 'அப்படிப் போடு'ன்னு பாராட்டத் தோணுது. ஆனாலும் இது எந்த அளவுக்குத் தெளிவா ரிசல்ட் கொடுக்குமோ. கோண புத்தி உள்ள நம்மாளுங்க, இதுலயும் குழப்பத்தைக் கொண்டு வருவாங்களே!

**சீ**க்ரெட்டா செல்போன் கேமராவை வைச்சு, பொண்ணுங்களைப் படம் பிடிச்சு நெட்டுல உலா விடுற குற்றங்கள், கேரளாவுல பெருகிக்கிட்டே போகுதாம். முதல் கட்ட நடவடிக்கையா ஓடுற ரெயில்களில செல்போன் கேமராவை வைச்சு, பெண்களை யாரும் போட்டோ எடுக்கக் கூடாதுன்னு ரயில்வே போலீஸ் தடா கொண்டு வந்திருக்கு. இதைக் கண்காணிக்க ரெயில்வே போலீசும் ரோந்து வர்றாங்களாம். ஏம்ப்பு இது எம்புட்டுப் பெரிய பிரச்னை? ரெயில்ல தடைன்னு போட்டா பஸ்சுல எடுப்பானுங்க. பார்க், பீச்சுன்னு எடுப்பானுங்க. மொத்தமா பொது இடங்களில் கேமரா செல்போன் பயன்படுத்தத் தடைன்னு கொண்டு வந்தாத்தான் ஏதாவது பலனிருக்கும். என்ன நாஞ் சொல்லுறது!

# கெட்ட நேரம்... கெடியாரம்!

**உ**லகத்தைப் பயமுறுத்துற நோய்களில மலேரியாவும் ஒண்ணு. அந்தக் குட்டிக் கொசுக்கள் லட்சக் கணக்கானவங்க உசிரைக் குடிச்சுடுது. 'இதைத் தடுக்கிறேன்'னு சூளுரை எடுத்த தென் ஆப்பிரிக்க விஞ்ஞானி ஜெர்வன் ஊயி, சூப்பரா மலேரியாவை வாட்ச் பண்ணுற வாட்ச் ஒண்ணை கண்டுபிடிச்சிருக்காராம். இந்தக் கெடியாரத்தை கையில கட்டுன சில நிமிடங்களில் ரத்தத்துல மலேரியா கிருமிங்க பரவி இருக்கா இல்லையான்னு கண்டுபிடிச்சு, இருந்தா 'பப்பரப்பாய்ங்'ன்னு உடனே அலாரம் அடிச்சுருமாம் இந்தக் கெடியாரம். அதோட கெடியாரத்துல கொசு உருவம் ஒண்ணு குஜாலா பறக்குமாம். தென் ஆப்பிரிக்காவுல விலைக்கு வரப்போற இந்தக் கெடியாரத்தோட விலை? நம்ம ரூபாய்க்கு பன்னிரண்டாயிரத்துச் சொச்சம். நம்ம கெட்ட நேரத்தைப் பாக்குறதுக்காக ஒரு கெடியாரம். என்னாத்த சொல்ல?

**டெ**க்னாலஜிக்கு சம்பந்தமில்லாம ஒரு நியூஸ் சொல்லவா? இந்தியாவுல அதிகமா வருமான வரி கட்டுற லேடி நம்ம ஐஸ்தான். (4.95 கோடி) ஏதாவது படம் போடுறாப்ல நியூஸ் வேணாமா கண்ணு? அதான் ஐஸ் நியூசு!





விஜயகாந்த் பேசுகிறேன்! 16

# தங்கப் பேனாவும்

நண்பர் பாக்யராஜ் நடித்து இயக்கிய 'தாவணிக் கனவுகள்' படம் எத்தனை சதவிகிதம் கற்பனையோ எனக்குத் தெரியாது. அவர் சினிமாவில் நடித்து சம்பாதித்த பணத்தில் தனது தங்கைகளுக்குத் திருமணம் செய்து வைக்கும் அந்தக் காட்சிகள் என் வாழ்வில் நடந்த உண்மை.

சினிமாவில் நடித்து சம்பாதித்த பணத்தை அக்காவுக்கு அனுப்புவேன். அக்காவும் மாமாவும் முன்னின்று ஒவ்வொரு தங்கைக்கும் மாப்பிள்ளை பார்த்து மணம் முடித்து வைத்தார்கள். நாலு தங்கைகளுக்கான கடமை முடிந்ததும், அடுத்து மூன்று தம்பிகளுக்கு அவர்களின் பிழைப்புக்கு வழியை ஏற்படுத்திக் கொடுத்தேன். இந்தக் கடமைகள் எல்லாம் முடித்து நிமிரும்போது என் வயசு முப்பதுக்கு மேல் ஆகிவிட்டது.

இதற்கு நடுவில் அப்பா, அண்ணன், சின்னம்மா இவர்களின் இழப்பு ஈடு செய்ய முடியாத சோகத்தைத் தந்தது. அண்ணியும் இரண்டு பிள்ளைகளும் ஆதரவற்றுப் போய்விடக் கூடாது என்று நினைத்தேன். அண்ணனின் பிள்ளைகளையும் படிக்க வைத்து அவர்களைக் கரை சேர்க்கும் பொறுப்பை நானே ஏற்றேன்.

இந்தச் சூழ்நிலையில்தான் அக்கா எனக்கு பெண் தேட ஆரம்பித்தார்கள். நானோ, 'இத்தனை வயதுக்குப் பிறகு எதுக்குக் கல்யாணம்? ஏழைகளுக்கு உதவுவதிலும், அனாதைப் பிள்ளைகளை எடுத்து வளர்ப்பதிலும் மீதி காலத்தைச் செலவிடலாம்னு இருக்கேன். அதனால எனக்குக் கல்யாணம் வேண்டாம்'னு சொல்லி வந்தேன். ஆனா அக்கா, மாமா, இப்ராஹிம் எல்லாம் என்னை விடவில்லை. எப்படியோ பேசி என்னைச் சம்மதிக்க வைத்தார்கள்.



# கலைஞரின்



ஜெயலலிதா ஆட்சியில் இருந்த நேரம். எதிர்கட்சித் தலைவர் கலைஞருக்கு பொன்விழா நடத்த இராம. நாராயணன், சந்திரசேகர், தியாகு எல்லாம் ஒரு குழுவாகப்போய் பலரைப் பார்த்தாங்க. அதுல கலந்துக்காம பலரும் நழுவிட்டாங்க. பல பெரிய நடிகர்கள் விழாவுக்கு வரத் தயங்கினாங்க, இதுக்குச் சரியான நபர் விஜயகாந்த் தான்னு சொல்லி தியாகு, அவங்களை என்னிடம் அழைத்து வந்தார். ஒரு தமிழ் அறிஞரை பெருமைப் படுத்துற விஷயம்னு நானும் தைரியமா முன்னின்று கடற்கரையில் கலைஞர் பொன் விழாவை நடத்தினேன். ஒரு தங்கப் பேனாவையும் கலைஞருக்கு அன்புடன் வழங்கினேன்.

இந்த விழாவுக்கு ரஜினி - கமல் வாழ்த்துக் கடிதம் அனுப்பி ஒதுங்கிக் கொண்டார்கள். அந்தப் பொன் விழா, அடுத்து வந்த தேர்தலில் கலைஞரின் வெற்றிக்குப் பயன்பட்டது. அவர் முதல்வரானதும் அத்தனை சினிமாக்காரர்களும் விழுந்தடித்து ஓடிவந்து வாழ்த்தினார்கள்.

பிறகு ஏதோ ஒரு விஷயத்துக்காக கலைஞர் என்னிடம் கோபித்துக் கொண்டு, 'நீ கொடுத்த தங்கப் பேனாவை திருப்பி வாங்கிக்கோ'னு சொன்னார். அது ஒரு தந்தையின் செல்லக் கோபம்

# கோபமும்!

என்று நான் சும்மா இருந்தேன்.

விழுப்புரத்தில் ஒரு கல்யாணத்தில் கலந்து கொள்ள கலைஞர் வந்தார். அதில் நானும் கலந்து கொள்ளச் சென்றபோது எனக்குப் பின்னால் இருநூறு கார்கள் வந்தன. கல்யாண மண்டபத்துக்குள் நுழையும் முன் எல்லாரையும் அமைதிப் படுத்திவிட்டு உள்ளே போனேன். கலைஞர் பேசிக் கொண்டிருந்தார். அந்த நேரம் பார்த்து சிலர்.. 'புரட்சிக் கலைஞர் வாழ்க. வருங்கால முதல்வர் கேப்டன் வாழ்க' என்று கோஷம் போட்டதும் கலைஞருக்குக் கடுமையான கோபம். நான் மேடையேறியதும் கலைஞரின் பாதம் பணிந்தேன். அப்போதும் அவரது கோபம் குறையவில்லை. முகத்தைத் திருப்பி வைத்துக் கொண்டார்.

நான் தலைவர் கலைஞரையும் அவரது தமிழையும் மிகவும் மதிப்பவன், நேசிப்பவன். எம்.ஜி. ஆர். ஆட்சியின்போது கலைஞரின் தலைமையில் நடந்த படவிழாவில் கலந்து கொண்டு அவர் கையால் ஷீல்டு வாங்கியவன், ஜெயலலிதா ஆட்சியில் இருந்தபோது கலைஞருக்கு பொன்விழா நடத்தியவன், கலைஞரின் தலைமையில் கல்யாணம் செய்து கொண்டவன், அவரது தலைமையில் பல விழாக்கள் நடத்தியவன். ஆனாலும் அவரது குடும்பப் பத்திரிகையும் தொலைக்காட்சியும் என்னை இருட்டடிப்பு செய்ததுதான் அதிகம். அவரது கட்சியின் அனுதாபியாகச் சொல்லப்பட்டபோதே அப்படி என்றால் தனியாகக் கட்சி ஆரம்பித்து விட்ட நிலையில் இன்று நான் எப்படி எல்லாம் அவர்களால் பாதிக்கப்படுவேன் என்பதை நீங்களே எண்ணிப் பார்த்துக் கொள்ளுங்கள்.

சிவாஜி சாரை நான் அதிக தடவை சந்தித்ததில்லை. பார்க்கப் போகிற ஒவ்வொரு தடவையும் எனக்கு ஏதாவது நல்லது சொல்லி அனுப்புவார்.

'உழவன் மகன் படம் பார்த்தேன். எனக்கு ரொம்பப் பிடிச்சுருக்கு. கதையோடு கமர்ஷியலா பண்ணியிருக்கே. எம்.ஜி.ஆர். மாதிரி படம் பண்றியே'ன்னார்.

காரைக்குடியில் 'ராஜகுமாரன்' ஷூட்டிங் நடக்கும்போது பக்கத்துல நடித்துக் கொண்டிருந்த என்னைச் சாப்பிடக் கூப்பிட்டார். "இல்லேப்பா நான் இப்பதான் ஹோட்டல்ல சாப்பிட்டு வந்தேன்'னு சொன்னேன்.

'ஹோட்டலில் எல்லாம் சாப்பிடாதே, நமக்கெல்லாம் முதலாளி படத் தயாரிப்பாளர்தான். நீ ஒரு நாள் படுத்துட்டா அவங்களுக்கு பல லட்சங்கள் நஷ்டமாகும். வேணும்னா ஒரு சமையல்காரனை வச்சுக்கோ, ஹோட்டலில் சாப்பிட்டு உடம்பைக் கெடுத்துக்காதே'ன்னார்.

'வீரப்பாண்டியன்' படத்தில் அவரோட நடிக்கும் போது நல்லா பழகினார். அவர் வீட்டுல இருந்து நிறைய சாப்பாடு இருபது பேர் சாப்பிடுற அளவுக்கு வரும். எல்லாருக்கும் கொடுப்பார். இது வெளியே தெரியாது. அவர் வீட்டு

## விஜயகாந்த் பற்றி வி.ஐ.பி!

1984-ல் பம்பாய் விமான நிலையத்தில் தான் விஜயகாந்தை முதன் முறையாகச் சந்தித்தேன். விமான நிலைய 'லவுஞ்ச்'சில் சந்தித்துப் பேசினோம். இனிமையாகப் பேசினார்; பழகினார்.

விஜயகாந்த் மீது எனக்கு நல்ல அபிமானம் உண்டு. சினிமா நடிகன் என்றால் மிக அழகனாகவும் கவர்ச்சியாகவும் இருக்க

பிரியாணி சூப்பராயிருக்கும்.

'நடிக்கும்போது கண்ணைப் பார்த்துப் பேசாதே' என்பார். நான் அவர் கண்ணைப் பார்க்காமல் அவரது காதை, காலை பார்ப்பேன், அதுவும் நடிக்கும்.

நடிகர் சங்கத் தலைவர் பொறுப்பை எடுத்துக் கொண்டதும் சிவாஜி சாரிடம் சங்கக் கடனை அடைக்கணும். உன்னை நெனைச்சு சந்தோஷப்படுறேன். ரொம்பப் பெருமையா இருக்குடா' என்றார்.

நடிகர் சங்கக் கடனை அடைக்கும் போது நீங்க முன் நின்று தான் செய்து தரணும்னு சொன்னேன் 'நல்லது செய்! என் வாழ்த்து

வேண்டும் என்ற மரபை உடைத்து ஒரு சராசரி மனிதனால்கூட நல்ல நடிகனாக வர முடியும் என நிரூபித்தவர் அவர்.

அவர் எப்பவும் கதர்ச் சட்டையை விரும்பி அணிகிறார். அவர் எளிமைக்கு அந்தக் கதராடை ஓர் எடுத்துக்காட்டு.

யாரும் திரைப்பட உலகில் செய்யாத ஒரு புரட்சி, திரைப்படக் கல்லூரி மாணவர்களுக்கு வழி காட்டியது. குறிப்பிட்ட சில பெரிய டைரக்டர்களின் படங்களில் மட்டுமே திரும்பத் திரும்ப நடித்துக் கொண்டிருக்காமல், படத்துக்குப் படம் ஒரு புதிய டைரக்டருக்கு வாய்ப்புக் கொடுப்பார். ஸ்ரீதர், கே.பாலசந்தர் போன்ற இயக்குனர்களை 'ஸ்டார் மேக்கர்ஸ்'னு சொல்லுவாங்க. விஜயகாந்த்தை 'டைரக்டர் மேக்கர்'னு சொல்லலாம்.

**- லேனா தமிழ்வாணன்**



ஆசி பெறப் போயிருந்தோம், அப்போது என்னைத் தனியாக அறைக்குள் அழைத்துப் போய் பேசினார்.

'நடிகர் சங்கத்துல நிறைய பிரச்னைகள் இருக்கு. நீ யாரையும் காம்ப்ரமைஸ் பண்ண முடியாது. ஒவ்வொருத்தங்க ஒண்ணு சொல்வாங்க, நீ கேட்டுக்கணும், சகிச்சுக்கணும், பொறாமைகள் அதிகமாயிருக்கும்.

'நான் என் கைக் காசு போட்டுச் செலவு பண்ணிட்டிருக்கும்போதே நான் சிமெண்ட் திருடிட்டேன்னு என் மேல பழி போடப் பார்த்தாங்க... இதை எல்லாம் சகிச்சுக்கிட்டு நீ பொறுமையா நடிகர் சங்கத்துக்காக உழைக்கணும், நடிகர் உனக்கு எப்பவும் இருக்கும்'ன்னார், அதுக்குள்ள இறந்துட்டார்.

சிவாஜி சார் ரொம்ப நல்ல மனிதர். அவர் பேசும் தோரணை மிரட்டலாக இருக்கும். ஆனா ஒரு குழந்தை மாதிரி, அவர் வாழ்க்கை முழுக்க சினிமா சினிமான்னே இருந்துட்டார். அன்னைக்கு நடிகர் திலகம் சொன்னது நூற்றுக்கு நூறு உண்மை. நடிகர் சங்கத்தில் அதை அனுபவித்தேன்.

பல சமயங்களில் நான் தவறாகப் புரிந்துகொள்ளப் பட்டிருக்கிறேன். இது ஏன்? எதனால்?

*(சொல்றேன்)*

# தாவரம்

**கை**நீட்டி வெயிலை
அணைத்து
உறிஞ்சி விட்டு
நிழலை
எச்சமிடுகிறது
மரம்!

**ப**ழங்களைப் பறவைகளுக்கும்
கவண் கற்களுக்கும்
தந்துவிட்டு
'பசியில்லை' என்று
நீர் மட்டும் குடித்து
விருந்தோம்புகிறது மரம்!

**கூ**டு காப்பகத்தில்
தங்கள் குழந்தைகளை
விட்டுவிட்டு
நிம்மதியாக
வேலைக்குச் செல்கின்றன
பறவைகள்!

**சு**ற்றிலும் பூக்களை
உதிர்த்து
மெத்தை ஆயத்தம்
செய்துவிட்டு
நின்றபடி
தூங்குகிறது
மரம்!

**அ**மைதி காக்கிறது மரம்
ஒன்றே போல்
காட்சியளிக்கும்
நூறு நூறு கிளைகளில்
கோடரியையும் அடக்கியபடி



"ஏன்டா... தம்பி... அவனவன் சாஃப்ட்வேர்... அது... இதுன்னு போய் லட்சலட்சமா சம்பாதிச்சுட்டு வர்றான்... நீ என்னடான்னா நல்ல படிப்பா படிச்சுட்டு, இப்படி மியூசிக் பக்கம் வந்தே ஆவேன்னு அடம் பிடிக்கறியே..."

இது யார் யாருக்குக் கொடுத்த செல்ல டோஸ் தெரியுமா? பிரபல புல்லாங்குழல் கலைஞர் ரமணி தன்னுடைய பேரன் அதுல் ரமணிக்குக் கொடுத்ததுதான். ஏன்... என்னாச்சு... அதுலிடமே கேட்டோம்.

"அது ஒண்ணுமில்ல சார். சங்கீதத்துல எனக்கு நிஜமாவே ஆர்வமிருக்கானு டெஸ்ட் பண்ணறதுக்காக என் தாத்தா என்னைக் கலாய்ச்சுருக்காரு. என்னோட குருவே தாத்தாதான். சின்னக் குழந்தையா இருக்கறப்போவே எனக்குச் சங்கீதத்துல ஆர்வம். நான் வளர வளர அந்த ஆர்வமும் வளர்ந்துடுச்சு... இதுல என்ன பிரச்னைன்னா, என்னை விட அந்த ஆர்வம் ரொம்ப வேகமா வளர்ந்துடுச்சு. ஆனாலும் படிப்பை மட்டும் விட்டுடல. சமர்த்தா படிச்சு, இப்போ எம்.பி.ஏ. முடிச்சுட்டு, ஒரு சாஃப்ட்வேர் கம்பெனில ஒர்க் பண்ணிட்டு இருக்கேன். ஆனா நைன் டு ஃபைவ் வேலையில எனக்கு இஷ்டமில்ல. என்னோட வாழ்க்கையையே இந்தச் சங்கீதத்துக்கு அர்ப்பணிச்சுடணும்னு நினைக்கறேன். இப்போ நிறைய கச்சேரிகள் பண்ணிட்டு இருக்கேன்" என்று சொல்லும் இந்த இருபத்தைந்து வயது இசைக்கலைஞருக்கு, நமது சங்கீதத்தின் பெருமைகளை உலகம் முழுக்க எடுத்துச் செல்ல ஆர்வம் அதிகம்.



# உடல், உயிர், இசை!

"இப்போ ஃபியூஷன் மியூஸிக் தொடர்பா நிறைய ஆராய்ச்சி செய்துட்டு இருக்கேன். இரண்டு சி.டி.க்களையும் வெளியிட்டு இருக்கேன். இசையின் மேல் உள்ள காதலால் இந்த சாஃப்ட்வேர் லொட்டு லொசுக்கு எல்லாத்தையும் விட்டுடப் போறேன்" என்று அதிர்ச்சியூட்டுகிறார் இந்த இளைஞர்.

"அது சரி.. இந்த ஃபீல்டுல பெரிசா சம்பாதிக்க முடியாதே..."

"கொஞ்ச நாள் கஷ்டப்பட்டா பின்னால அந்தப் பிரச்னையும் தீர்ந்துடும். இனி என்னோட உயிர், உடல், சுவாசம் எல்லாமே இசைதான்" என்று சொல்லும் அதுலுக்குப் பிடித்த இசையமைப்பாளர் யுவன் சங்கர் ராஜா.

- கோகிலா

முப்பது நாளைக்கும் முப்பது வித கூட்டு, குழம்பு, தோசை... என பத்திரிகைகள் இலவசமாக வழங்கி அதகளம் பண்ணிக் கொண்டிருக்கின்றன. சில பிரபலங்களிடம் போய் 'முப்பது ஸ்பெஷலாக' நீங்கள் எதைத் தருவீர்கள் எனக் கேட்ட போது பின்னி எடுத்துட்டாங்க...



# 30 ஸ்பெஷல்!

**விக்ரம் :** நா முப்பது வித கெட்டப்பு பற்றிச் சொல்வேன். இந்த முப்பதை வச்சு மூவாயிரம் பண்ணிக்கலாம். ஒல்லி, குண்டு, சமத்து, அசடு, பொறுக்கின்னு... நம்ம கெட்டப்பு மாற மாற கேரியரும் டாப் கியர்ல எகிறிடும். இப்பக் கூட பாலா டைரக்ஷன்ல 'டாடிஸன்னு' ஒரு படம் பண்றேன். டாடி குண்டு, ஸன்னு ஒல்லி. அதனால காலைல குண்டாயிருப்பேன். உடனே சாயந்திரம் பார்த்தீங் கன்னா ஒல்லியாயிடுவேன். பாலா பட்டினி போட்டுடுவாரு. பச்சைத் தண்ணி கூடக் கொடுக்க மாட்டாரு. தரணி டைரக்ஷன்ல 'ஜம்'னு ஒரு படம். அதில ஒரே வெரைட்டி... டிஜிபி, ஐஜி, கான்ஸ்டபிள்னு ஒரு பக்கம், ஜேப்படி, ஒரு டஜன் கொலை பண்ணிய ஸைக்கோ, பொம்பள பொறுக்கின்னு இன்னொரு பக்கம்... எல்லா ரோலும் நானே. நூடுல்ஸ் மாதிரி முடி, மொட்டைத் தலை, கிராப், க்ரூகட்னு ஹேர் ஸ்டைல், பெரிய மீசை, அருவா மீசை, பென்ஸில் மீசை, பளிச் வழுவழு முகம்னு... எங்கேயும் விக் கிடையாது. ஒட்டு கிடையாது, ஒரிஜினல்... அப்படி கடுமையா உழைச்சிருக்கேன்... முப்பது கெட்டப்பும் சூப்பரப்புன்னு சொல்லத் தான் போறீங்க!

**தேவகௌடா :** தூக்கம் என்பது மனுஷனுக்கு மிக முக்கியம். கோழித் தூக்கம், கும்பகர்ண தூக்கம்னு எத்தனை வெரைட்டி இருக்கு. முப்பது வகை உறக்கத்தைப் பற்றிச் சொல்லித் தரப் போறேன். கண்ணை விழிச்சுட்டு தயவு செய்து படிங்க. ஜனங்க தூங்கிக் கிட்டே வோட்டுப் போட்டதி னாலதான் நீங்க ஜெயிச்சு அரசியலுக்கு வந்தீங்கன்னு என்னைப் பார்த்து பல பேரு நக்கலடிக் கறாங்க. உறக்கத்தினால எவ்வளவோ சௌகர்யங்கள் இருக்கு. ஊழல், அராஜகங்கள், விலைவாசி, பஸ் எரிப்பு, ஸ்கூல் அட்மிஷன், ஈவ்டீஸிங்... இந்தக் கண்றாவி யெல்லாம் பார்க்க வேண்டாமே! நல்ல



உறக்கத்துக்கு நல்ல 'ஊட்டா' ரொம்ப முக்கியம். கண்ணை அப்படியே சொக்கிட்டு வரும் பாருங்க... முதல்வர் பதவியாவது பிரதமர் பதவியாவது... உங்ககிட்டே சொல்றதுக்கு என்னங்க... அன்னிக்கு இப்படித்தான் தூங்கிட்டிருந்தேன். என் பிள்ளை குமாரசுவாமி எனக்கு எதிரா வியூகம் அமைச்சு இப்ப முதல்வராகப் போறான். (மனசுக்குள்ள குஷியாத்தான் இருக்கு)

குன்னக்குடி : முப்பதுவித பொட்டு டிசைன்கள். நல்லா நெத்திய மறைச்சு, கலர் கலரா போஸ்டர் ஒட்டற மாதிரி பனிச்சுன்னு, ஒண்ணுங்கிழ ஒண்ணு எப்படி நிமிஷமா வைச்சுக்கறதுன்னு சொல்லப் போறேன். நா கலக்கலா நெத்தியலங்காரம் பண்ணியவுடன் வானமே நெகிழ்ந்து போய் அமிர்த தாரையா கொட்ட ஆரம்பிச்சுடும்.





மேடையில இப்படி நா மேக்கப்புடன் உட்கார்ந்தேன்னு வச்சுக்குங்கோ கடைசி சீட்ல இருக்கறவங்களுக்குக் கூட ஷார்ப்பா தெரிவேன். இந்தப் பொட்டு டிஸைன்ல எல்லாம் நா ஆராய்ச்சியே பண்ணியிருக்கேன்.

எங்காத்து மாமிக்கு கூட எங்கிட்ட கோபம் 'வாங்கற சம்பாவனைல பாதி இப்படி குங்குமத்த குழைச்சு இடற துல்லயே செலவழிச்சுட்டேளே... அந்தப் பணத்தையெல்லாம் சேர்த்து வச்சிருந்தா மவுண்ட் ரோடுலேயே இரண்டு பில்டிங் கட்டியிருக்கலாமேன்னு' அங்கலாய்க்கிறா... இந்தக் குன்னக்குடிக்கு அடையாளம் வயலின் மாத்திரம் அல்ல; வண்ண வண்ண டிஸைன் பொட்டுகளும்தான்...

நிலா : முப்பது நாளைக்கு முப்பது வித பாத்! ஹலோ... பாத்னா சேமியா பாத், பிஸிபேளாபாத், பகாளாபாத் இல்ல... குளியல் அண்டர்ஸ்டாண்ட்! எத்தனை வித பாத்... சோனா பாத், சோப்பு பாத், ஆயில் பாத்... அப்படின்னு. ஆனா நா சமீபத்துல ஒரு தமிழ்ப் படத்துல ஆக்ட் கொடுக்கும்போது பூச்சி பாத் கொடுத்துட்டாங்க... 'அ...ஆ'ன்னு கத்திட்டேன். என் ஸ்கின், ஸ்மைல் எல்லாம் டாமேஜ். போதாததற்கு புரொடியூசர் வேற கையைப் பிடிச்சு முறுக்கி... "நீ தில்லி லட்கி. குளிருன்னு குளிச்சிருக்க மாட்டே. இப்ப குளிக்கப் போறயா இல்லையா"ன்னு டார்ச்சர் பண்ணிட்டாரு. எனக்குக் குளிக்க சுதந்திரம் வேணும். இப்ப தயாரிப்பாளர், இயக்குநர், ஹீரோலேர்ந்து லைட் பாய் வரை எங்கிட்டே மன்னிப்புக் கேட்டே ஆகணும்... கல்யாணமாகாத ஒரு பெண் 'குளிக்காம' இருந்தாத்தான் தப்பு; என்னை மாதிரி மினரல் வாட்டர்ல குளிச்சிருந்தா தப்பே கிடையாது!

**- லதா சேகர்**

# "'முத்து' படம் பார்த்தே ஆகணும்!"

"**வீ**ட்டைக் கட்டிப்பார். கல்யாணம் பண்ணிப்பார்" என்பார்கள். இப்போது புதிதாகச் சேர்ந்திருக்கிறது 'மருத்துவக் கருத்தரங்கம் நடத்திப் பார்' என்பதும்.

"இதிலென்ன கஷ்டம் இருக்கு. அதற்குத்தான் ஈவன்ட் மேனேஜ்மென்ட் ஏஜென்சிகள் நிறைய வந்தாச்சே..." என்றால், "அவர்களால் இதை வெற்றிகரமாக நடத்தித்தர முடியாது" என்று சவால் விடுகிறார் லலிதா ராய். இவர் கடந்த 13 வருடங்களாக மருத்துவம் தொடர்பான கருத்தரங்குகளை ஏற்பாடு செய்து வரும் 'மருந்தேஷ்வரா என்டர்பிரைசஸ்' நிறுவனத்தை நடத்தி வருகிறார்.






* லலிதா ராய்

"**இ**ந்த மெடிக்கல் கான்ஃபரன்ஸ்களை நடத்தறது கிட்டத்தட்ட நம்ம வீட்டுக் கல்யாணத்தை நடத்தற மாதிரி தாங்க" என்று குஷியாக ஆரம்பித்தார் லலிதா ராய்.

"முதல்ல கருத்தரங்குக்கு வர இருப்பவர்களுக்கு கடிதம் அனுப்பறது, குறிப்பேடுகளைத் தயாரிக்கறது, பார்வையாளர்கள் மற்றும் சிறப்புப் பேராசிரியர்களைத் தேர்வு செய்து அவர்களுக்கு முறைப்படி தகவல் தருவது, பயணத் திட்டங்களை வகுப்பது, கருத்தரங்கு நடக்கும் இடம், நாள், உணவு வசதி, ஆடியோ மற்றும் வீடியோ வசதிகள் என அனைத்தையும் நாங்களே செய்து தர வேண்டியிருக்கும்" என்கிறார் லலிதா ராய்.

"எல்லாவற்றையும்விட முக்கியமானது கருத்தரங்கில் சிறப்புரை ஆற்ற வரும் மருத்துவர்களை தேர்வு செய்வதுதான். இது மிகவும் சிக்கலான, சிரமமான விஷயம். நரம்பியல் தொடர்பான கருத்தரங்கு என்று வைத்துக் கொள்வோம். அது தொடர்பாக விரிவாகப் பேசுவதற்குத் தகுதியுடையவர்கள் எல்லாருமே நம் நாட்டில் கிடைத்துவிடமாட்டார்கள். பெரும்பாலானவர்கள் வெளிநாடுகளில்தான் இருப்பார்கள். அவர்களைக் கண்டறிந்து, அவர்களுடைய படிப்பு, திறமை, அனுபவம் ஆகியவற்றைக் கணக்கிட்டு நமக்குத் தேவையானவர்களை அழைத்துவர வேண்டும். இதில் சிறு தவறு செய்தாலும் ஒட்டுமொத்த கருத்தரங்கமே வீணாகிவிடும்..." என்கிறார் மற்றொரு நிர்வாகியான கௌதம்.

சிறப்பு விரிவுரையாளர்களை நீங்களே தேர்ந்தெடுப்பது எப்படி?

இதுவரை கிட்டத்தட்ட 65 சர்வதேச மாநாடுகளை நடத்திவிட்டோம். அந்த அனுபவத்தில் எங்களிடம் உலகில் இருக்கும் பிரபல மருத்துவர்களின் பட்டியலும் துறை வாரியாக இருக்கிறது. அதைக் கொண்டு தேர்வு செய்து வரவழைக்கிறோம். இந்த மருத்துவ கருத்தரங்கின் ஒவ்வொரு அங்குலத்தையும் நாங்களே உருவாக்குகிறோம். இது மிகவும் சவாலான விஷயம்" என்கிறார் கௌதம்.



* கௌதம்

இத்தனை ஆண்டு அனுபவத்தில் இவர்களுக்கு பல சுவாரஸ்யமான, பரபரப்பான அனுபவங்களும் ஏற்பட்டிருக்கின்றன.

"94-ல் ஒரு சர்வதேசக் கருத்தரங்கை நடத்தினோம். அதில் கலந்து கொண்ட ஐந்நூறு பேரில் நூறு பேர் வெளிநாட்டைச் சேர்ந்தவர்கள். அவர்கள் நூறு பேரும் உடனடியாகப் புறப்பட வேண்டிய கட்டாயம். ஆனால் விமானமேறு முன் மருத்துவ சோதனை செய்தாக வேண்டுமே. இருக்கின்ற நேரத்தில் அத்தனை பேருக்கும் அதைச் செய்வது சாத்தியமே அல்ல.. இருந்தாலும் நாங்களே தகுதியுள்ள மருத்துவர்கள் சிலரை வரவழைத்து, அவசரம் அவசரமாக எல்லா சோதனைகளையும் முடித்து பயணிகளை வெற்றிகரமாக விமானமேற்றினோம். இது மிகவும் த்ரில்லிங்கான விஷயம்" என்கிறார் கௌதம்.

இதைவிட சுவாரஸ்யமான விஷயம் ரஜினிகாந்த் சம்பந்தப்பட்டது என்று பீடிகைபோட்டார் லலிதா.

"2002-ல் மருத்துவக் கருத்தரங்கில் பங்குபெற ஜப்பானியர்கள் சில பேர் வந்திருந்தாங்க. உங்களுக்கே தெரியும் ஜப்பான்ல சூப்பர் ஸ்டார் ரஜினி காந்துக்கு மிகப் பெரிய க்ரேஸ் இருக்குன்னு. அவங்கள்ல ஒரு டாக்டர் ரஜினி ரசிகர். உடனடியா ரஜினி நடித்த 'முத்து' படத்தைப் பார்த்தாகணும்னு அடம்பிடிக்க, அப்போ எந்த தியேட்டர்ல படம் ஓடுதுங்கறதே தெரியாம, ரொம்ப சிரமப்பட்டு கண்டுபிடிச்சு, அவரைக் கொண்டு போய் படம் பார்க்க வைத்து, விமானமேத்தி அனுப்பினோம். அப்ப, அவர் முகத்துல தெரிஞ்ச சந்தோஷம் இருக்கே!" என்கிறார் லலிதா.

* ஞாபகம் வருதே...



இவர்கள் தற்போது புதிதாக 'பேட்ச் ரீயுனியன்' என்கிற ஒரு சேவையையும் துவக்கியுள்ளனர். பல வருடங்களுக்கு முன்பு ஒன்றாக மருத்துவக் கல்லூரியில் படித்து, இன்று பல்வேறுபட்ட துறைகளில், பல்வேறுபட்ட நாடுகளில் பணிபுரியும் மருத்துவர்களை ஒருங்கிணைத்து சந்திக்க வைப்பதுதான்.

"இது, மருத்துவ சேவையையும் தாண்டிய விஷயம் என்பதால் மனசுக்கு மகிழ்ச்சி தருகிறது" என்கிறார் லலிதா ராய்.

- முராரி

படங்கள் : ராஜன்

# கரை சேர்க்கத்தான் கப்பல்!

எப்போதுந்தான் பொலிட்டிகல் பீட்டு, லொட்டு, லொசுக்குன்னு போறோமே... இந்தத் தடவை ஒரு இலக்கியக் கூட்டத்துக்குப் போயிட்டு வரலாம்னு ஒரு ஐடியா வந்துச்சப்பு... அந்த நேரம் பார்த்து நம்ம கவிஞரு



• ஆர்.எம்.வியை சமாதானப்படுத்தும் முத்துலிங்கம்

முத்துலிங்கம் 'காற்றில் விதைத்த கருத்து'ன்னு ஒரு பொஸ்தகம் போட்டிருக்காராமே.... அதை நம்ம 'புரட்சிப் புயலு' வெளியிடறார்னு ஒரு மேட்டரு நம்ம காதுக்கு வந்துச்சு... சரிதான்னு வாணி மகாலுக்கு வண்டியை விட்டேன்... ஆறு மணிக்கு விழா.... ஆறரை மணிக்கு ஹவுஸ் புல் ஆகல... என்ன மேட்டரா இருக்கும்னு விசாரிச்சேன்.. அதை பின்னால நம்ம முத்துலிங்கமே மேடையில பளார்னு நெத்தியடியா சொல்லிப் புட்டாரு...

"இன்னிக்கு இன்னொரு கூட்டம் நடக்குது... இல்லன்னா இங்க நல்ல கூட்டம் வந்திருக்கும்... (முரசொலி அறக்கட்டளை சார்பாக விருது வழங்கும் விழா) இப்போ கூட வைரமுத்து போன் பண்ணி பேசினாரு... அங்க போகலைன்னா கலைஞரு கோவிச்சுக்குவாருன்னாரு.. நானும் சரி சரி... நீங்க கலைஞர் பின்னால போங்க... நான் வைகோ பின்னால போறேன்னு சொல்லிட்டேன்"னு போட்டாரு பாருங்க ஒரு போடு... ஆடிட்டோரியத்துல அந்த வெகுளித்தனமான பேச்சுக்கு செம ரெஸ்பான்ச...

நம்ம ஆளுங்களுக்கு ஏத்தி விடறதுன்னா ரொம்ப இஷ்டம் போல... குமரன் பதிப்பகம் பதிப்பித்த இந்தப் புத்தகத்தை வைகோ வெளியிட ஆர்.எம்.வீ. வாங்கிக்கிட்டாரு... அதை எப்படிச் சொன்னாரு தெரியுமா நெல்லை ஜெயந்தா? "செயின்ட் ஜார்ஜ் கோட்டை வெளியிட புதுக்கோட்டை பெற்றுக் கொள்ளும்" - அடேயப்பா...



மூணு கரை பார்ட்டிங்க (அதாம்பு... ம.தி.மு.க. தொண்டர்கள்) அப்படியே புல்லரிச்சுப் போயிட்டாங்க... இன்ட்ரோவுல முத்துலிங்கம் சொன்னதுக்குப் பதில் சொல்ற மாதிரி பேசினாருப்பு வாலி... "நான் கலைஞர் பின்னாலும் போவேன்.. வைகோ பின்னாலும் போவேன்.. சர்க்கரை எங்கு உள்ளதோ அங்கெல்லாம் எறும்பு இருக்கும்''னு சொல்லிட்டு, ''முத்துலிங்கம் சொன்னால்தான் என் கவிதையை நான் கவிதை என்றே ஒத்துக்



கொள்வேன்"னு சொன்னாரு பாருங்க... அப்படியே ஆடிட்டோரியமே ஆர்ப்பரிச்சடுச்சு...

இப்போ ஆர்.எம்.வீயாருக்கு 'அருளாளர்' கேப்ஷன் போடறாங்க... என்ன மேட்டர்னு தெரியலை... விழாவுக்கான பத்திரிகையில முத்துலிங்கம் வாங்கின விருதுகளை லிஸ்ட் போட்டவங்க எம்.ஜி.ஆர். விருதை விட்டுப்புட்டாங்க... அதை ஏன் போடலன்னு ஆர்.எம்வீ. மேடையிலேயே டென்ஷனாயிட்டாருப்பு... உடனே கவிஞரு ஓடியாந்து, "அது வந்து..."ன்னு ஒரு இழுஇழுக்க, "சரி சரி"ன்னுட்டு திரும்பப் பேசினாரு ஆர்.எம்வீ... வைகோவைப் பத்தி பேசலைன்னா நல்லா இருக்குமா... "நான் வைகோவை அணுஅணுவாக ரசித்துக் கொண்டிருப்பவன்.... எதிர்காலத்துக்கு வழிகாட்ட ஒரு தலைவர் உருவாகிக் கொண்டிருக்கிறார்"னு பொலிட்டிகல் பஞ்ச் விட்டு உட்கார்ந்தாரு அருளாளரு.

பெரியார்தாசன் நல்லாத்தான் பேசினாரு... ஆனா அவுட் ஆஃப் சிலபஸா 'தமிழ் முரசு' பத்திரிகையை நக்கலடிச்சுட்டாரு... "சும்மா 'நச்'னு இருக்குமாமே... நச்சா இருக்கணும்னு முடிவு பண்ணியாச்சு... அப்புறம் எதுக்கு சும்மா இருக்கணும்"னு சவுண்டு விட, வைகோ டூமச்சாவே சிரிச்சிபுட்டாரு...

ஒருவழியா வைகோவுக்கு எட்டரை மணிக்குத்தான் மைக் கிடைச்சது... ஆனாலும் இந்த கலிங்கப்பட்டியாருக்கு பொடி வச்சுப் பேசலைன்னா தூக்கமே வராது போல. முத்துலிங்கத்தோட புத்தகத்துல இருந்த ஒவ்வொரு விஷயத்தையும் நுணுக்கமா படிச்சு பாராட்டிக்கிட்டே வந்த வைகோ திடுதிப்புன்னு "காலம் ஒரு நாள் மாறும்... கவலைகள் எல்லாம் தீரும்"னு வச்சாரு பாருங்க ஒரு வேட்டு.. அடேயப்பா... வந்த கைதட்டுல வாணிமகாலே ஜெர்க் ஆயிடுச்சு... இருங்க... இன்னும் க்ளைமேக்ஸ் வரல... "கப்பல் என்பது நங்கூரமிடப்பட்டு துறைமுகத்தில் இருந்தால் மிகவும் பாதுகாப்பாக இருக்கும்... உண்மைதான்... ஆனால் கப்பல் அதற்காகச் செய்யப்பட்டதல்ல... தன்னை நம்பி வந்தவர்களை பத்திரமாக கரை

* விழா மேடையில்...

சேர்க்க வேண்டும் என்பதற்காகவே செய்யப்பட்டது"னு இன்னொரு வெடியைக் கொளுத்திப் போட்டுட்டுக் கிளம்பினாரு வைகோ.

என்னவோ தெரியல பாரதிராஜா ஏவி.எம். ஃபங்ஷன்லயும் ஆப்சன்ட்... இந்த ஃபங்ஷன்லயும் ஆப்சன்ட்...

**–வைகோ சிக்னல்**

படங்கள் : ஸ்ரீஹரி

# இது லொள் லொள் வருஷம்!

சீன புதுவருடக் கொண்டாட்டங்கள் இன்னமும் முடிந்தபாடில்லை. குதூகலமாகக் குதி குதியென்று குதித்துக் கொண்டிருக்கிறார்கள். இந்த வருடம் சீனர்கள் அனைவருக்குமே நாய் பிழைப்புதான். ஏனென்றால் இது நாய் வருடம். (ஒவ்வொரு வருடத்தையும் ஏதாவது பிராணியின் பெயரை வைத்துத்தான் அழைப்பார்கள். பன்றி வருடம், சேவல் வருடம், எலி வருடம் இப்படியாக).

இது நாய் வருடம் என்பதால் லொள் லொள் பொம்மைகளை வாங்க போட்டா போட்டி நடந்து கொண்டிருக்கிறது. நாயார் கொடுத்து வைத்தவர். ஹச் என்று தும்மினால் அவருக்கு விக்ஸ் தேய்த்துவிட ஆயிரம் பேர் ஓடி வருவார்கள். கேட்டதை வாங்கிக் கொடுப்பார்கள்.

நாயிடம் அப்படி என்ன விசேஷம்? சீனர்களைப் பொறுத்தவரையில் நாய் என்றால் முன்னேற்றம். நாய் என்றால் நம்பிக்கை. நாய் என்றால் திறமை. வீடுகளில், அலுவலகங்களில், டி-ஷர்ட்டில், பேனாவில், ரொட்டியில் எல்லா இடங்களிலும் நாயாரின் திருவுருவம் தான் பொறிக்கப்பட்டிருக்கும்.

அதேபோல் ட்ராகனுக்கும் சரியான மவுசு. நாக்கிலிருந்து நெருப்பைக் கக்கும் இந்தப் பிராணியை கையைச் சுட்டுக் கொள்ளாமல் வாங்கி வந்து வீட்டில் வைத்து விட்டால் பிறகு ஆபத்து அண்டாதாம்.

பெங்ஷுய்-காரர்கள் தங்கள் பங்குக்கு நாயைக் கொண்டாடிக் கொண்டிருக்கிறார்கள். நிறைய ஆருடம் சொல்கிறார்கள். "நாய் வருஷத்துல பொறக்கறவங்க குதிரையோடயும் புலியோடயும் (அதாவது அந்தந்த வருடங்களில் பிறந்தவர்கள்) ஈஸியா ஃப்ரெண்ட் ஆயிடுவாங்க. ஆனா ட்ராகனோட மட்டும் ஒத்துப் போக மாட்டாங்க."

நாய் பொம்மை வாங்குவதோடு நிறுத்திக் கொள்ளாமல் நிஜ நாயையும் பலர் விரும்பி வாங்கிக் கொண்டிருக்கிறார்கள். அப்படியானால் குரங்கு வருடத்தின் போதும் (2004) ட்ராகன் வருடத்தின்போதும் (2000), பாம்பு வருடத்தின் போதும் (2001) அந்தந்த வருடத்துக்கான ஜீவராசிகளை வாங்கினார்களா என்று தெரியவில்லை.

சீன காலண்டர்படி இது 4703-ஆம் வருடம்.



முந்தைய நாய் வருடங்கள் - 1922, 1934, 1946, 1958, 1970, 1982 மற்றும் 1994. சில பிரபலமான நாய் வருடக்காரர்கள் - பில் கிளிண்டன், மைக்கேல் ஜாக்ஸன், ஜெனிஃபர் லோபஸ், மடோனா, ஆன்ட்ரே அகாசி மற்றும் இந்த வருடம் பிறந்துள்ள குட்டிக் குட்டி 'ங்கா' குழந்தைகள்.

- மருதன்

# சின்ன ஜோக், பெரிய பரிசு!

# போட்டி முடிவு-3

மெகா சீரியல் ஜோக்ஸ் எழுதிக் குவித்து 'பெண்டு' நிமிர்த்திய வாசகர்களுக்கு நன்றி. ரொம்ப டாபிகலா ஜோக் எழுதி, சென்னை தூத்துக்குடி மெட்டல்ஸ் வழங்கும் ப்ரீத்தி மிக்ஸியை பரிசாகப் பெறுபவர் இ.தங்கமணி.

"அக்கா, கைமாத்தா அம்பது ரூபாய் தாங்க.."

"ஸாரி, எங்கிட்ட பைசா இல்லே."

"'கோலங்கள்' அபி சத்தியமா காசு இல்லைன்னு சொல்லுங்க."

"கொஞ்சம் பொறு. அம்பது ரூபாய் எடுத்துட்டு வந்திடறேன்."

**- இ. தங்கமணி**

**பிரசுரத்துக்குத் தேர்வானவை!**

"சித்ரகுப்தா, டி.வி. மெகா சீரியல் நடிகரின் உயிரை எடுத்து வருவதில் தவறு நேர்ந்துவிட்டதாமே?"

"ஆம் பிரபோ. 'இவருக்குப் பதில் இனி இவர்'னு மாற்றியிருப்பதை அறியாமல், நமது கிங்கரர்கள் தவறு செய்து விட்டார்கள்!"

**- யமுனா ரெங்கநாதன்**

"எதுக்கு கடைகளை அடைக்கச் சொல்றாங்க?"

"'உசிரு' மெகா சீரியல்ல அமைச்சர் மொக்கராசு இறந்துட்டாராம். அதுக்கு துக்கம் அனுஷ்டிக்கிறாங்களாம்!"

**- ஹிதாயத் நிஸா**

"என்னடி, திடீர்னு கடைக்குப் போய் ஐயாயிரம் ரூபாய்க்குப் பட்டுப் புடைவை வாங்கிக்கிட்டு வந்திருக்க?"

"என்ன மறந்துட்டீங்களா? இன்னிக்கு 'கடமை' மெகா சீரியல்லே வர ரோக்ஸிக்குக் கல்யாணம். அதை சாதாரணப் புடைவை கட்டிக்கிட்டு ஜன் பார்த்தா நல்லாவா இருக்கும்?"

**- டி.கே.சுப்பிரமணியன்**

"இந்தத் தேர்தல்ல பெண்கள் ஓட்டு எல்லாம் நம்ம தலைவருக்குத்தான்..."

"எப்படிச் சொல்றே..?"

"ஆமா. அவரு ஆட்சிக்கு வந்தா, 'தாமரை கிட்ட உண்மையைச் சொல்லி செல்வியையும் ஜி.ஜே.யையும் சேர்த்து வைப்பேன். பத்மினிகிட்டே இருந்து சந்தியா புருஷனை மீட்டு வருவேன். அபிக்கு நல்ல எதிர்காலத்தை ஏற்படுத்தித் தருவேன்னு' தேர்தல் வாக்குறுதி கொடுத்துருக்காரே."

**- ஜி.சுந்தரமூர்த்தி**

"இருந்தாலும் அந்த வீட்டுக்காரங்களுக்கு ரொம்பதான் பணத் திமிர்!"

"எதை வெச்சு சொல்றே?"

"டீவில மெகா சீரியல் ஓடறப்ப அவங்க விடற கண்ணீரைத் துடைச்சு எடுக்கவே, மாசா மாசம் ஆயிரம் ரூபாய்க்கு கர்ச்சிப் வாங்கறாங்கன்னா பாத்துக்கோங்களேன்!"

**- மூ.மோகன்**

"நம்ம ஃப்ரண்ட் நீலமேகம் டீ.வி. மெகா சீரியல் டைரக்டர் ஆயிட்டான்!"

"அப்ப இனி அவனை 'நீள' மேகம்னு கூப்பிடலாம்னு சொல்லு!"

**- ஆர்.ராமச்சந்திரன்**





ஜப்பானுக்கு ஒரு விதத்தில் சஷ்டியப்த பூர்த்தி. இரண்டாம் உலகப்போர் முடிவடைந்து அறுபது வருடங்கள் நிறைவடைந்ததை நினைவுகொள்கிறது அது. அந்தப் போரில் தோல்விகண்ட நாடு ஜப்பான். பின் எதற்காக நினைவு கூறலும் கொண் டாட்டமும்?

சாம்பலில் இருந்து உயிர்த்தெழுந்து இன்று ஆலமரமாகக் கிளை பரப்பி இருக்கிறதே ஜப்பான். அது மகிழ்ச்சிகரமான விஷயம்தானே? பொருளாதாரத்தில் ஓட்டகச்சிவிங்கி ஓட்டம்! உலகின் இரண்டாவது மிகப்பெரிய தொழில் வளர்ச்சி கண்ட நாடு என்ற பெருமை! இந்த அறுபதாண்டு வளர்ச்சியை நினைவுகூர்ந்திருக்கிறது 'ஏஷியா - பசிபிக்' இதழ்.

1983-ல் ஜப்பானில் தொலைக்காட்சி நுழைந்தது. ஜப்பானின் வாழ்க்கைமுறை மாற இது ஒரு முக்கிய சாதனமாக அமைந்தது. அப்போது பணக்காரர்களின் வீட்டில் மட்டும்தான் டீ.வி. அவ்வளவு விலை!

நிறைய கோட்ஸில்லா படங்கள் வந்துவிட்டன. என்றாலும் இது ஜப்பானில் முதலில் வடிவமெடுத்தது 1954-ல். கற்பனைப் பாத்திரம்தாம். என்றாலும் அணு ஆயுதங்களினால் விளையக்கூடிய பயங்கரங்களைச் சுட்டிக்காட்டியதால் ஜப்பானிய மக்கள் கோட்ஸில் லாவை விரும்பினார்கள்.

பேராசை பிடித்துப்போய் பிற நாடுகளின் எல்லைக்குள் புகுந்த நாடு என்ற ஜப்பானின் இமேஜ் மெதுவாக மாறியதற்குக் காரணமான சில நிகழ்வுகள். 1964-ல் ஒலிம்பிக்ஸ் டோக்கியோவில் நடைபெற்றதும், அதற்கு இருவருடங்கள் கழித்து பீட்டில்ஸ் இசைக்குழுவினர் ஜப்பானில் காலடி வைத்ததும் இரு உதாரணங்கள். 2002-ல் கால்பந்து உலகக் கோப்பைப் பந்தயத்தை ஏற்பாடு செய்த நாடுகளில் ஒன்றாக ஜப்பான் விளங்கியது.

1995 ஜப்பானுக்குச் சோதனையான வருடம். கூட்டம் நிறைந்த பாதாள ரயில்களில் தீவிரவாதிகள் விஷவாயு வீச சிலர் உயிரிழந்தனர். அதே ஆண்டு நிலநடுக்கத்தால் இறந்தவர்களின் எண்ணிக்கை ஆயிரத்துக்கும் மேல்.

தூதரக உறவுகள் மேம்பட்டன. 1951-ல் கையெழுத்தான சான்பிரான்ஸிஸ்கோ அமைதி உடன்படிக்கை மூலம் ஜப்பான் மீண்டும் சுதந்திரம் பெற்றது. 1979-ல்

# ஆல்மரமாய் !

நடைபெற்ற டோக்கியோ உச்சி மாநாட்டில் ஜப்பானை முன்பு எதிர்த்த பலநாடுகள் பங்கேற்றன. பூனையும் எலியுமாக இருந்த சீனாவும் ஜப்பானும் 1972-ல் அமைதி பேச்சுவார்த்தைக்கு உடன்பட்டது உலக அதிசயம்.



• அமைதி உடன்படிக்கை

உலக அரங்கில் ஜப்பானின் பெருமையை உணர்த்தியவர்கள்:

அகிரா குரோஸவா, திரைப்பட இயக்குனர். ரஷோமான், தி செவன் சாமுராய் ஆகிய திரைப்படங்களை மறக்க முடியுமா?

தபகோ (சிகரெட்) என்ற சிறுகதையின் மூலம் கவனத்தைக் கவர்ந்த எழுத்தாளர் யுகியோ மிஷிமா. "ஒரு முகமூடியின் வாக்குமூலங்கள்" (கன்ஃபெஷன்ஸ் ஆஃப் ஏ மாஸ்க்) மற்றும் "அலைகளின் ஓசை" (தி சவுண்ட் ஆஃப் வேவ்ஸ்) ஆகிய இவருடைய நாவல்கள் உலக அளவில் பேசப்பட்டன.

ஜப்பானில் அனிமேஷன் தொழில் நுட்பம் பரவியதற்கு முக்கியக் காரணமான ஒசமோ டெஸுகா. 1947-ல் இவர் உருவாக்கிய "புதிய புதையல் தீவு" (ஷி டகராஜிமா) புதிய பரிமாணங்களைத் திரைப்படங்களில் புகுத்தியது. தன் வாழ்நாளில் ஒன்றரை லட்சம் ஓவியங்களை வரைந்தவர்.

மேடைப் பாடகியும் நடிகையுமான மொமே யமகுசி. சக நடிகர் ஒருவரைத் திருமணம் செய்து கொண்டு ஓய்வு பெற்றுவிட்டார். இல்லையென்றால் காலப்போக்கில் ஆசியாவின் தலைசிறந்த இசைக்கலைஞர்களில் ஒருவராகவே விளங்கி இருப்பார் என்று பல ஜப்பானியர்கள் கருதுகின்றனர். இவரது இசை ஆல்பம் சிங்கப்பூரில் [illegible] [illegible]க்கும் அதிகமான அளவில் விற்றிருக்கிறது.

• ஜி.எஸ்.எஸ்

● இரா. சக்கரபாணி, மதுரை - 7

? 'சட்டசபை ஒரு தேன்கூடு அதில் முதல்வர் ஜெயலலிதா ராணித் தேனியாக இருந்து இமாலய சாதனை படைத்துள்ளார்' என்கிறாரே காளி முத்து?

! ஹய்யோ, பாவம்! விலங்கியல் விஞ் ஞானம் காளிமுத்துவுக்குத் தெரியா விட்டாலும் ஜெயலலிதாவுக்குத் தெரியும்.

● வீ. உதயக்குமாரன், வீரன்வயல்

? மத்திய அமைச்சரவையின் மாற்றம் குறித்து?

! கூட்டணி அரசு சார்பில் மன்மோஹன் சிங் பாகவதர் நடத்திய 'குறைந்தபட்ச செயல் திட்டம்' கதா காலட்சேபத்தின் இடையிலே, பூஜைக்குப் பின் வினியோகிக்கப்பட்ட சுண்டல். ஹரிகதை இன்னும் சில காலத்துக்குத் தொடரும்.

● வே.நா.கதிர்வேல், வேலூர்

? "சுயமரியாதை திருமணம் செய்து கொண்டவர்கள் அதிக குழந்தை பெறு கிறார்கள். அக்னி சாட்சியாகத் திருமணம் செய்து கொண்டவர்கள் குழந்தை வேண்டி காசி - ராமேசுவரம் செல்கிறார்கள்" என்று கருணாநிதி கூறி யிருப்பது குறித்து தராசுவின் கருத்து என்ன?

! அது பகுத்தறிவு வாதமல்ல; மூட நம்பிக்கை என்பது என் கருத்து.

● ஆர்.ரங்கநாதன், சென்னை - 17

? மூன்றாவது டெஸ்டில் பதான் ஹாட் ட்ரிக் எப்படி?

! ஒரு டெஸ்ட் மேட்ச்சில் முதல் ஓவரிலேயே ஹாட் ட்ரிக் என்பது இதற்கு முன்பு கிடையாது; இனியும் நேர வாய்ப்பில்லை. இந்த அபார சாத னையையொட்டி மூன்றாவது டெஸ்ட் டிராவில் முடிந்திருந்தால் நிம்மதிப் பெருமூச்சு விட்டிருக்கலாம். தோற்றதில் அந்தச் சாதனை வியர்த்தமாகி விட்டது!

● ஜி.ஜெயராமன், கூந்தலூர்

? உங்களை அடிக்கடி, அதிகம் பயப் பட வைக்கிற விஷயம் எது?

! அடுத்த முதல்வர் யார் என்கிற கேள்விதான்.

● எம். பாஸ்கர், திண்டுக்கல்

? 'தாங்கள் ஆட்சி அதிகாரத்தைக் கைப்பற்றுவதில் என்ன தவறு இருக் கிறது?' என்று வைகோ கேட்டுள்ளாரே

! சரியாவது, தவறாவது? மக்கள் அப் படித் தீர்மானித்தால் அது கட்டளை யாச்சே! ஆனால், இப்போது நிலைமை எல்லாருமாகச் சேர்ந்து வாக்குகளைச் சேகரித்து, ஆட்சியை தி.மு.க வசம் ஒப்ப விப்பதாக அல்லவா இருக்கிறது!

● ஜி. குப்புசாமி, சங்கராபுரம் ✱

? லண்டன் 'மேக்ஸிம்' ஆங்கில நாளேடு எந்த தைரியத்தில் நடிகை குஷ்புவின் படத்தைக் கொச்சைப்படுத்தி வெளியிட்டிருக்கக் கூடும் என்று நீங்கள் நினைக்கிறீர்கள்?

! மேலைநாடுகளின் மலிவான பத்திரிகை கலாசாரத்தில் இதுபோன்ற அசிங்கங்கள் சகஜம். இங்கும் மெள்ள ஊடுருவுகிறது. பத்திரிகைத் துறையில் அன்னிய முதலீடை அனுமதித்ததன் மூலம் இந்த வீழ்ச்சிப் பாதையில் நாம் மேலும் விரைகிறோம்.

● எஸ்.ரேணுகா, நீடாமங்கலம்

? 'எனது', 'நான்' என்ற சொற்கள் அடிக்கடி முதல்வரின் பேச்சில் வரு வதைக் கவனித்தீர்களா? இது எதைக் காட்டுகிறது?

! நிச்சயமாக தன்னம்பிக்கையைக் காட்டவில்லை! இதற்கு மேல் சொன்



• ஆர்வ விருந்து!

# நீங்கள் கேட்டவை - தராசு

னால், அவதூறு வழக்கைச் சந்திக்க நேரும்.

● எம். சம்பத், வேலாயுதம்பாளையம்

? வெள்ள நிவாரண வினியோகத்தின் போது ஏற்பட்ட நெரிசலில் 42 பேர் உயிரிழந்த சம்பவத்துக்குத் தமிழக அரசே முழுப் பொறுப்பேற்க வேண்டும்



• பூஜைக்கு நடுவில்...

தேசிய கொடியைத் தலைகீழாக ஏற்றி யிருக்கிறார்களே?

! கர்நாடகத்தைத் தலைகீழாக்கியிருக் கிறோம். வாய்ப்புக் கிடைத்தால் இந்தியா வையும் கவிழ்த்துவிடுவோம் என்று குறிப்பாக உணர்த்த வேண்டுமானால், அதற்கு இதுதானா வழி...?

● எல்.மீனாட்சிசுந்தரம், திருவண்ணாமலை

? ராகுல் காந்தி பாத யாத்திரை போனால் உ.பியில் காங்கிரஸ் பலப் படுமா?

! ஹைதராபாத் காங்கிரஸ் மாநாட்டில் அவர் பேசியபடி நடந்து கொண்டால் காங்கிரஸ் நிச்சயம் பலப்படும். பாத யாத்திரை போன்ற நாடகங்கள் அவருக் குத் தேவையில்லை. காரிலேயே ஊர் ஊராகப் போகலாம்.பேசியதைச் செயல் படுத்திக் காட்டட்டும்.

# மத்திய அமைச்சரவை மாற்றங்கள்...?



தன்னம்பிக்கை தொலைந்து..!



• பகுத்தறிவு துறந்து...!



• நிலைமை கடந்து...!

என்று உச்சநீதிமன்றம் தீர்ப்பளித்துள் ளது குறித்து...?

! தட்டிக் கொடுப்பார்கள் என்று நினைத்து உச்சநீதிமன்றம் போய், சவுக்கடி பெற்றுள்ளது, தமிழக அரசு!

● கே. தெய்வசிகாமணி, ஆவடி

? குடியரசு நாளன்று ஏற்காட்டில் முகாமிட்டிருந்த பா.ஜ.க எம்.எல்.ஏக்கள்,

● ஆர். மாதவராமன், கிருஷ்ணகிரி

? மத்திய அரசு சானியாவுக்கு பத்மஸ்ரீ விருது வழங்க முடிவு செய்திருப் பது பற்றி...?

! தகுதியான நபர்தான். ஆனால் மிக அதிகமான பேருக்குச் சுண்டல் போல் அள்ளிக் கொடுத்ததால் பத்மஸ்ரீதான் தகுதி இழந்து போயிருக்கிறது.



• தீர்ப்பு புரிந்து...



• விஞ்ஞானம் மறந்து!

● ஏ.ஜஹ்பர் காதர், விளாத்திகுளம்

? மோசமான சர்வாதிகாரி பட்டியலில் மீண்டும் பாக். அதிபர் முஷாரஃப்பின் பெயர் இடம்பெற்றிருப்பது பற்றி...?

! 'நியூஸ் வீக்' இதழுக்கு அவர் சமீபத்தில் அளித்துள்ள பேட்டி இதை உறுதிப்படுத்துகிறது. இந்தியாவில் பெருகும் பயங்கரவாதத்துக்குப் பாகிஸ்தான் காரணமல்ல; அதனைத் தூண்டுவோர் சுயமாக இயங்கும் பயங்கரவாத அமைப்புகள்தான் என்று ஒரே போடாகப் போட்டவர், அவற்றுக்கு இடமளித்து ஊக்குவிப்பது பாகிஸ்தான்தான் என்பதை மறைக்கப் பார்க்கிறார். முழுப் பூசணிக்காயைச் சோற்றில் மறைக்க முடியாமல் இன்று இறுவர், புத்திசாலியான சர்வாதிகாரியாக இருக்க முடியாது!

❒ ரூ.100/- பரிசு பெறுபவர்:

ராமசேஷன்,
கொத்தாம்பாடி,
கல்பகனூர் அஞ்சல்,
ஆத்தூர், சேலம் - 636 109

● ரூ.50/- பரிசு பெறுபவர்:

ஜி. குப்புசாமி,
த/பெ ம.கோவிந்தன்,
41/169, பூட்டை ரோடு,
சங்கராபுரம் - 606 401

● ஷோபனாதாசன்,
நாட்டரசன்கோட்டை

? "தேர்தலில் தோற்றால் கட்சியைக் கலைக்க மாட்டேன்" என்று விஜயகாந்த் முழங்கியுள்ளாரே?

! அடப் பாவமே! 'ஜெயித்தால்' என்று பேசிக் கொண்டிருந்தவர் 'தோற்றால்'க்கு மாறியிருக்கிறாரே!

● என். சண்முகம்,
திருவண்ணாமலை

? அன்னை இந்திரா காந்தி பேரவை என்கிற புதிய அமைப்பை திண்டிவனம் ராமமூர்த்தி துவக்கியுள்ளது குறித்து..?

! சிற்றவையாகவே அது இருக்கும்!

● ராமசேஷன், கல்பகனூர் ❒

? பூட்டா சிங்கின் செயலை 'தவறு' என்று உச்சநீதி மன்றமே சுட்டிக் காட்டிய பிறகும்கூட, 'தாம் செய்தது சரி' என்று உடும்புப் பிடிவாதமாக இருப்பது அவருடைய உயர் பதவிக்கு அழகா?

! உச்சநீதி மன்ற பெஞ்சின் இரு நீதிபதிகள், பூட்டா சிங் பேரில் குற்றமில்லை என்றே கூறியுள்ளனர். மற்ற மூவரும் கூறிய பெரும்பான்மை தீர்ப்பே இறுதித் தீர்ப்பாயிற்று. எனவே, பெரும்பான்மைத் தீர்ப்பு அடிப்படையில் பூட்டா சிங் ராஜினாமா செய்ய நேர்ந்தாலும், தம் பேரில் தப்பில்லை என்று வாதாட அவர் உரிமை பெற்றவராகிறார்.



# கண்ணீர்க் கோலங்கள்!



"நெல்லையப்பர் கோயில் கும்பாபிஷேகத்தை விமரிசையாக நடத்தி முடித்ததில் முக்கியப் பங்கு வகித்த விஸ்வநாதன், அந்தக் கோயில் திருவிழாவில் கலந்து கொள்வதற்காகத் திருநெல்வேலி சென்றபோது, மரணமடைந்தது துரதிருஷ்டவசமானது. ஆர்.எம்.கே.வி. நிறுவனமும், விஸ்வநாதனும், எந்த அளவுக்கு நெல்லை மக்களின் அபிமானத்தைப் பெற்றிருந்தார்கள் என்பதற்கு ஆயிரக் கணக்கில் திரண்டு வந்து, அவரது இறுதி ஊர்வலத்தில் கலந்து கொண்ட பொதுமக்களின் கண்ணீரே சாட்சி. பல வீடுகளில் கோலம் போடும்போது, 'ஆர்.எம்.கே.வி. அதிபருக்கு கண்ணீர் அஞ்சலி' என்று எழுதி தங்கள் துக்கத்தை வெளிப்படுத்தினார்கள்" என்கிறார் ஆர்.எம்.கே.வி. நிறுவனத்தின் நிதி நிர்வாகியான பிரகாஷ்.

"விஸ்வநாதனின் அப்பா குமாரசாமி, சென்னை வரும்போது, தவறாமல், எங்கள் கடைக்கு வந்து ரொம்ப நேரம் பேசிக் கொண்டிருந்துவிட்டுப் போவார். அவருடன் கூட வரும் ஏழெட்டு வயது விஸ்வநாதனும், தம்பி சிவகுமாரும், எங்கள் கடைக்குள்ளேயே ஓடிப் பிடித்து விளையாடிக் கொண்டிருப்பார்கள். நான் பார்க்க வளர்ந்த விஸ்வநாதன், கடைப் பொறுப்பை ஏற்று வியாபாரத்தைப் பெருக்கியபோதும் நான் சந்தோஷப்பட்டிருக்கிறேன்" என்கிறார் நல்லி குப்புசாமி செட்டியார்.

"ஆர்.எம்.கே.வி. நிறுவனத்தில் அதிகம் படிக்காதவர்களை வேலைக்கு எடுத்துக் கொண்டு, அவர்களைச் சிறந்த ஊழியர்களாக்க அவர் எடுத்த புதுமையான முயற்சி அபாரமானது. ஊழியர்களுக்கென்று தமிழில் பிரத்யேகமான மனித வள மேம்பாட்டுப் பயிற்சி வகுப்புகளை வடிவமைத்துச் செயல்படுத்தினார். வெறுமனே வியாபார நுட்பங்களை மட்டும் சொல்லித்தராமல், தன்னம்பிக்கை ஊட்டி, தொடர்ந்து நின்று கொண்டே இருப்பதால், ஏற்படும் கால் வலியைப் போக்க உடற்பயிற்சிகள், மனப்பயிற்சிகள், பேச்சுப் பயிற்சி என அனைத்தும் கிடைக்கச் செய்தார்."

"ஷோரூம்களில் உள் அலங்காரம் தொடங்கி விளம்பரப் புதுமைகள் வரை எல்லாவற்றிலும் காலத்துக்கேற்ப மாற்றங்களை அறிமுகப்படுத்தினார். இளைய தலைமுறையினரால் ஓரங்கட்டப்பட்ட பாவாடை, சட்டைக்கு 'சிண்ட்ரெல்லா பாவாடையை' அறிமுகப்படுத்தியதன் மூலம் மறுவாழ்வு கொடுத்தார்.

திருவாங்கூர் அரண்மனை ஓவியத்தில் இடம் பெற்ற ஐஸ்வர்யப் பூக்கள், அம்ச தமயந்தி, காஞ்சி ஸ்தூபி, கிருஷ்ணபுரம் சிற்பங்களை பட்டுப் புடைவையில் கொண்டு வந்து புதுமைகள் படைத்தவர். 214 மீட்டர் நீள கின்னஸ் புடைவை, 50 ஆயிரம் வண்ணங்களுடன் சேலை, அதற்கு ஜோதிகாவைக் கொண்டு புதுமையான விளம்பரம் என்று ஏராளமான சாதனை புரிந்த அவரை ஜேஸிஸ் நிறுவனம், இந்தியாவின் பெருஞ்சாதனை புரிந்த பத்து இளைஞர்களுள் ஒருவராகத் தேர்ந்தெடுத்துக் கௌரவித்ததில் வியப்பில்லை" என்கிறார் விவிடைஸ் விளம்பர நிறுவனத்தின் சபேசன்.

- எஸ்.சந்திரமௌலி



# கலக்குறே கிஷன்!

இருபத்தியொரு வயதில் இயக்குன ராகிவிட்டு ஏதோ உலகையே தன் காலடிக்குள் கொண்டு வந்து விட்டதுபோல் இனி யாரும் பேச முடியாது. பெங்களூரைச் சேர்ந்த ஒன்பது வயது கிஷன் அனைவரது சாதனைகளையும் விழுங்கத் தயாராகிவிட்டான்.

'கேர் ஆஃப் ஃபுட்பாத்' - தமிழ், கன்னடம், ஹிந்தி மொழிகளில் தயாராகும் படம். இதில் கதை, இயக்கம், கதாநாயகன் என மாபெரும் மூன்று பொறுப்புகளை, தன் சிறிய தோள்களில் சுமந்து கொண்டிருக்கிறான் கிஷன்.

நான்கு வயதிலிருந்து சினிமாவிலும் டி.வி.யிலும் குழந்தை வேடத்தில் நடித்து வரும் கிஷனுக்கு சினிமா ஐ.க்யூ அதிகம்!

கிஷனின் தந்தை ஐ.ஏ.எஸ். அதிகாரி - அம்மா சவுண்ட் ரெக்கார்டிஸ்ட். தங்கள் மகனுக்கு திரைக்கதை பற்றிய குண்டு குண்டு புத்தகங்களை வாங்கிக் கொடுத்து கிஷனின் அறிவை மேலும் வளர்த்துள்ளனர். 'கேர் ஆஃப் ஃபுட்பாத்' படத்தை கிஷனின் அம்மாவே தயாரிக்கிறார்.

பள்ளிக்குச் செல்லாமலேயே ஏழைச்சிறுவன் ஒருவன் படிப்பில் முன்னேறுவதுதான் படத்தின் கதை. ஹிந்தி நடிகர் ஜாக்கி ஷெராப், சென்ற வருட தேசிய விருது பெற்ற நடிகையான தாரா போன்ற பெரும்புள்ளிகளும் நடிக்கின்றனர். தான் நினைக்கிற நடிப்பு வரும்வரைக்கும் இருவரையும் பந்தாடுகிறானாம் இந்தப் பொடிப் பயல். தினம் தினம் இவனை வேடிக்கை பார்த்து ஆயிரம் சுவாரஸ்யக் கதைகள் சொல்கிறது யூனிட். இரவானால் போதும் ஒரு மடியில் ஸ்கிரிப்ட்டும் இன்னொரு மடியில் ஹோம் வொர்க்கையும் வைத்து கொட்டக் கொட்ட விழித்து வேலை செய்து கொண்டிருப்பானாம்.

''ஹாய், குட்டித் தம்பி, சினிமா என்றால் எப்படியிருக்க வேண்டும்'' என்று கேட்டால் சேரன், தங்கர் பச்சான் பாணியில் பதிலளிக்கிறான்.

''அங்கிள், சினிமாங்கிறது வெறும் கேளிக்கை மட்டும் கிடையாது. அது ஒரு சக்தி வாய்ந்த ஊடகம். அதுல நல்ல கருத்தும் சொன்னாத்தான் நாம எடுக்கற படம் முழு சினிமாவா இருக்கும். சரிதானே?'' என்று மழலை மாறாமல் பேசுகிறான். ஆள் பொடிசு; தத்துவம் பெருசு!

- ச.ந.கண்ணன்

* படத்தில் ஒரு காட்சி...



